# சுவையான இனிப்புப்பண்டங்கள் எளிதாகத் தயாரிக்கலாம்.

மில்க்மெய்டினால் தயாரிக்கப்பட்ட, சுவை நிறைந்த இந்த ஸ்பெஷல் இனிப்புப் பண்டங்களை உங்கள் குடும்பத்தினர் விரும்புவார்கள். இவற்றை எளிதாகத் தயாரிப்பதில் உங்களுக்கு ஒரே ஆனந்தம்தான்.

## பாதாம் கீர்

5 பேருக்கு
சமைக்க ஆகும் நேரம்: 20 நிமிடங்கள்

### தேவை

மில்க்மெய்ட் —1 டின், புதுப் பால் —1 லிட்டர்
முந்திரிப் பருப்பு —50 கிராம் (6 டேபிள் ஸ்பூன்)
பாதாம் பருப்பு எஸ்ஸென்ஸ் —1/4 டீஸ்பூன்

### செய்முறை

1. பாலைக் காய்ச்சி ஆற வைக்கவும். உடைத்த முந்திரிப் பருப்பை 2 கப் பாலில் 2 மணி நேரத்துக்கு ஊற வைக்கவும். ஊறிய முந்திரிப் பருப்பை மையாக அரைக்கவும்.
2. மில்க்மெய்டையும், அரைத்த முந்திரிப் பருப்பையும் சேர்த்து கலக்கவும்.
3. பாதாம் பருப்பு எஸ்ஸென்ஸை சேர்க்கவும்.
4. சூடாகவோ, குளிர வைத்தோ பரிமாறவும்.

## கடலைப்பருப்பு பாயாசம்

6 பேருக்கு
செய்ய ஆகும் நேரம்: 30-35 நிமிடங்கள்

### தேவை

| | |
|---|---|
| மில்க்மெய்ட் | —1 டின் |
| கடலைப் பருப்பு | —1 கப் |
| வெல்லம் | —100 கிராம் (1/2 கப்) |
| ஏலக்காய் பவுடர் | —1/4 டீஸ்பூன் |
| தேங்காய் | —1 (துருவப்பட்டது) |
| முந்திரிப் பருப்பு | —10 (விரும்பினால்) |
| நெய் | —1 டேபிள்ஸ்பூன் |

### செய்முறை

1. கடலைப் பருப்பை 3 கப் தண்ணீரில் குழையும் வரை வேக விட்டு பருப்பை மசிக்கவும்.
2. வெல்லத்தை ஒரு கப் நீரில் கரைத்து வடிகட்டவும்.
3. தேங்காய்த் துருவலிருந்து ஒரு கப் கெட்டிப்பாலும் ஒரு கப் அடர்த்தி குறைந்த தேங்காய்ப் பாலும் எடுத்துக்கொள்ளவும்.
4. வெல்லப்பாகு, பருப்பு, அடர்த்தி குறைந்த தேங்காய்ப் பால் மற்றும் ஏலக்காய் பொடியை கலவையாக்கிக் கொள்ளவும்.
5. கலவையை இளந்தூட்டில் சிறிது நேரத்திற்கு வேகவிட்டு மில்க்மெய்ட் சேர்த்து கிளறி கெட்டித் தேங்காய்ப் பாலை சேர்க்கவும்.
6. முந்திரிப்பருப்பை நெய்யில் வறுத்து எடுத்தபின் மீதியுள்ள நெய்யிலேயே தேங்காய்த் துண்டுகளையும் வறுக்கவும்.
7. பாயாசத்தில் முந்திரிப்பருப்பு, தேங்காய்த் துண்டுகள் மற்றும் நெய்யைச் சேர்த்து கலக்கவும். அடுப்பிலிருந்து இறக்கி பரிமாறவும்.

# விந்தை பல செய்திட மில்க்மெய்ட்

## இலவசம்

மில்க்மெய்ட் ரெஸிப்பி புத்தகம்
அதனைப் பெற போஸ்ட் பேக் 22,
புது தில்லி-110019
என்னும் முகவரிக்கு அனுப்பவும்.




TS McCann/MM/291 TM

நெஸ்லேயின் ஒரு தரமான தயாரிப்பு

## வடக்குவாசல் :

நில நடுக்கத்தால் பாதிக்கப்பட்டு ஆஸ்பத்திரிகளில் சிகிச்சை பெற்று வரும் மக்கள் சிகிச்சை முடிந்தும் ஆஸ்பத்திரிகளை விட்டு வெளியேறத் தயங்குகிறார்கள். ஏன்? எங்கே போவது? பல ஊர்களே அழிந்து போனதில் அவர்கள் வசிக்க வீடுகள் இல்லை. மீட்புப் பணியாளர்கள் அமைத்துத் தரும் தற்காலிக டென்டுகளில் வசிக்க வேண்டும். கீழே தண்ணந்தரை. மேலே டென்ட் துணி. பனிவேறு பெய்யத் தொடங்கி எங்கேயும் வெள்ளை வெள்ளையாக ஐஸ் படியத் துவங்கி விட்டது. வாடைக் காற்று வேறு. அந்த டென்டுகளில் வசிப்பது எப்படி? போதாததற்கு இன்றளவும் பிணங்கள் மிதந்துவரும் பாகிரதி தண்ணீரைக் குடிப்பதினால் ஏற்படும் கொள்ளை நோய்கள் வேறு. மீட்புப் பணியாளர்களுக்கும், மருத்துவர்களுக்கும் சோதனை இன்னும் எவ்வளவு நாட்களோ?

இயற்கை நிகழ்த்திய பூகம்பக் கொடுமையைத் தூக்கிச் சாப்பிட்டு விட்டது தில்லியில் மனிதனுக்கு மனிதன் செய்துள்ள கொடுமை. தீபாவளி அன்று இரவு 'சுரா' என்னும் ஒரு கலக்கல் பானம் கரைபுரண்டோடியதில் மக்கள் மூாண்டவண்ணம் இருக்கின்றனர். இக்கட்டுரை எழுதும் வரையில் சுமார் 200 உயிர் பலி. சுமார் 500 பேர் கவலைக்கிடமான நிலையில்.

ஒரு மனித உயிரின் விலை பத்தே ரூபாய் தான். ஆம்! 'மெதில் ஆல்கஹால்' என்னும் விஷம் அடங்கிய இந்த ஆட்கொல்லி வாந்தி, பேதி, காலரா போன்ற நோய்களைக் குணமாக்கும். 'கற்பூர அஸவ' என்னும் ஆயுர்வேத டானிக்கின் பெயரால் 250 மில்லி பத்து ரூபாய்க்கு விற்பனையாகியிருக்கிறது. டெல்லியில் இதன் உற்பத்திக்கும், விற்பனைக்கும் அதிகாரபூர்வ தடை உள்ளது. அதனால் இந்த கலக்கல் டெல்லிக்கு அருகே உத்தரபிரதேச எல்லைக்குள் காஜியாபாத் ஜில்லா முரத் நகரில் உள்ள 'கர்னால் பார்மஸி' என்னும் கம்பெனியில் தயாரிக்கப்பட்டுள்ளது. டெல்லியில் இந்த பானத்தைக் கொண்டு வரவே தடையிருந்தும் மருந்துக் கடைகளில் மட்டும் அல்லாமல், ஏழை மக்கள் வாழும் ஜுக்கி ஜோன்படிகளில் (குப்பங்களில்) வெற்றிலை பாக்குக் கடைகளிலும் மளிகைக் கடைகளிலும் கூட விற்பனை

# ஒரு மனித உயிரின் விலை பத்து ரூபாய்!

செய்யப்பட்டு வந்துள்ளது. ஆனால் தீவிரமாக எந்த நடவடிக்கையும் எடுக்கப்படாததால் பானம் தயாரிப்பவர்களுக்கும், விற்பவர்களுக்கும் குளிர்விட்டுப் போய் விட்டது. இந்த சோகத்துக்குப் பிறகு, இதுவரை சுமார் 4700 பாட்டில்கள் 'கற்பூர அஸவ' பறிமுதல் செய்யப்பட்டு சுமார் 35 கடைகள் சீல் வைக்கப்பட்டுள்ளன. இதைத் தயாரித்த 'கர்னால் பார்மஸி'யும் சீல் வைக்கப்பட்டுள்ளது.

பாரதீய ஜனதா கட்சி இறந்தவர் குடும்பங்களுக்கு ஒரு லட்ச ரூபாய் விதம் நஷ்ட ஈடு கோர, அரசாங்கம் பத்தாயிரம் ரூபாய் தர முன் வந்துள்ளது. என்ன பணம் கொடுத்தாலும் மாண்டவர் மீளப் போவதில்லை. பிழைத்திருந்தும் கண்பார்வை போய் அவதிப்படப் போகிறவர்களுக்கு என்ன செய்யலாம்?

மது விலக்கு இங்கு அமுலில் இல்லை. ஆனாலும் கிடைக்கின்ற நாட்டுச் சரக்கு, 'கற்பூர அஸவ'வை விட விலை அதிகமாதலால் இந்த விஷத்தை மக்கள் நாடியிருக்கிறார்கள். மற்ற விஷயங்களை லஞ்ச ஊழல் கவனித்துக் கொண்டது!

குற்றவாளிகள் தண்டிக்கப் படுவார்களா? சட்டத்தில் ஓட்டை இருந்து தப்பிவிடுவார்களா? முதல் குற்றவாளி, பொருளாதாரச் சீர்குலைவும், நல்லது கெட்டது தெரிந்து கொள்ள உதவும் கல்வி அறிவின்மையும்தான். இதற்கு யார் பொறுப்பு?

– இருள்நீக்கி கணேசன்





# உத்தம புத்திரன்: சிவாஜி-எம்.ஜி.ஆர்.மோதல்!



நடித்துக் கொடுத்தார்

விட்டுக் கொடுத்தார்

"ஏழை படும் பாடு", "கன்னியின் காதலி", "மனிதன்" போன்ற படங்களை டைரக்ட் செய்து திறமையான டைரக்டர் என்று பெயரெடுத்திருந்தவர் ராம்நாத். அவர் படங்கள் உயர்ந்த ரசனையோடு இருக்கும். அவர் டைரக்டர் மட்டுமல்ல; தலைசிறந்த காமிராமேனும் கூட. இதனாலெல்லாம் என் மதிப்பில் உயர்ந்திருந்த அவர்தான் "உத்தமபுத்திரன்" படத்தை டைரக்ட் செய்ய வேண்டும் என்று நான் விரும்ப, என் பார்ட்னர்களும் ஒப்புக் கொண்டார்கள். அவரை நாடிச் சென்றோம்.

ஆனால் இதென்ன, அவர் ஏன் இப்படி சிரிக்கிறார், எங்கள் கோரிக்கையைக் கேட்டு? எங்கள் பிரமிப்பு நீங்கு முன்னரே அவர் பேசினார் :

"இதே படத்தை வேறு ஒருவரும் தயாரிக்கிறார். அவருக்கு டைரக்ட் செய்து கொடுக்க நான் ஏற்கெனவே ஒப்புக் கொண்டு விட்டேன்!"

எங்களுக்கு அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி!

"என்ன ஸார் இது? ஸ்ரீவள்ளி எடுக்கலாம்னு திட்டம் போட்டு சிவாஜியிடம் போனால் அவர், 'வேறு ஒருவர் அதை எடுக்கிறார்; நான்தான் நடிக்கிறேன்' என்கிறார். சரி, உத்தமபுத்திரன் எடுக்கலாம்னு திட்டம் போட்டு உங்ககிட்ட வந்தால், நீங்களும் 'இதை வேறு ஒருவர் எடுக்கிறார்; நான்தான் டைரக்ட் பண்றேன்' என்கிறீங்க..."

எங்கள் ஏமாற்றத்தைப் புரிந்து கொண்ட ராம்நாத் மேலும் சிரிக்காமல், "ஐ ஆம் ஸாரி" என்றார். "ஆனால் நான் ஒன்னும் பண்ணறதுக்கில்லை."

"ஸார்! நாங்க உத்தமபுத்திரனில் டபுள் ரோல்ல நடிக்க சிவாஜியின் சம்மதத்தைப் பெற்றுக் கொண்டு வந்திருக்கோம்... உங்க படத்துல யார் நடிக்கிறதா இருக்காங்க...?"

"சொன்னா ஆச்சர்யப்படுவீங்க!"

"இதுக்கு மேல ஆச்சர்யப்படவும் விஷயம் இருக்க முடியுமா?"

"அப்படின்னா கேட்டுக்குங்க; எம்.ஜி.ஆர்.!"

திடுக்கிட்டோம். "என்னது!"

"ஆமாம் ஸார், நடிப்பது எம்.ஜி.ஆர்.; தயாரிப்பாளரும் எம்.ஜி.ஆர்.தான்!"

அதிர்ச்சியிலிருந்து மீளாமலே நானும் பார்ட்னர் கிருஷ்ணமூர்த்தியும் ராம்நாத்திடமிருந்து விடைபெற்றுக் கொண்டோம்.

"என்ன, ஸ்ரீதர்? மறுபடி கதை தேடும் படலமா?" என்றார் பார்ட்னர் கிருஷ்ணமூர்த்தி.

"ம்ம்ம்..." நான் தீவிரமாக யோசித்தேன்.

"அந்த மூன்றாவது கதையையும் வேறு யாராவது எடுப்பதாகச் சொன்னாலும் சொல்வாங்க! இப்ப நம்ம லக் அப்படியிருக்கு!"

"வேற வேலையில்லை?" என்றேன் நான், சற்று உணர்ச்சிவசப்பட்டு.

"ஸ்ரீதர் நீ என்ன சொல்றே!"

"உத்தமபுத்திரன் கதையையே எடுப்போம்!"

"ஸ்ரீதர் யோசிச்சுத்தான் பேசறியா? யாரோட யாரை மோத விடறே!"

"இதோ பாருங்க, இந்தக் கதையை நாம எடுக்கறதுன்னு தீர்மானிச்சு மளமளன்னு வேலையிலே இறங்கிட்டோம். பி.யூ. சின்னப்பா நடிச்ச பழைய படத்தைப் போட்டுப் பார்த்தோம். கதைக்குப் புதிய டிரீட்மெண்ட் எழுதிட்டோம். சிவாஜிகிட்ட ஒப்புதல் வாங்கிட்டோம். இப்ப ஏன் திட்டத்தைக் கை விடணும்...?"

"ஆனா... எம். ஜி. ஆர்.... ராம்நாத்..."

"அவங்களும் எடுக்கட்டும்; நாமும் எடுப்போம். தொழில் ரீதியான ஆரோக்கியமான போட்டியா இருக்கட்டும். நம்ம படம் வெற்றி பெறும்கிற நம்பிக்கை எனக்கு இருக்கு!"

கிருஷ்ணமூர்த்தி என் துணிவுக்குத் துணை நின்றார்.

நாளிதழ்களில், "சிவாஜி இரட்டை வேஷத்தில் நடிக்கும் உத்தமபுத்திரன்" என்று விளம்பரம் கொடுத்தோம்.

அன்று நான்காவது பெரிய அதிர்ச்சி எங்களுக்குக் காத்திருந்தது!

ஆம், அதே நாளிதழின் இன்னொரு பக்கத்தில் "எம்.ஜி.ஆர். இரட்டை வேடத்தில் நடிக்கும் உத்தமபுத்திரன்" என்று விளம்பரம்!

டைரக்டர் ஸ்ரீதர்

இது தமிழகம் முழுவதும் பெரிய பரபரப்பை ஏற்படுத்தி விட்டது.

அதிர்ச்சிகளையும் ஆச்சர்யங்களையும் ஒதுக்கி வைத்து விட்டுப் படப்பிடிப்பில் ஈடுபட்டோம். பிரும்மாண்ட அளவில் ஸெட் போட வேண்டியிருந்தது. அனுபவசாலியான ஆர்ட் டைரக்டர் கங்கா தான் என் நினைவுக்கு வந்தார். பல பெரிய இயக்குனர்களுக்கு வேலை பார்த்தவர். சரித்திரப் படங்கள் பலவற்றுக்கு செட்கள் நிர்மாணித்தவர். எதையும் சட்டென்று கிரகித்துக் கொண்ட கங்காவுக்கு, நல்ல நகைச்சுவை உணர்ச்சி இருந்தது. அதனால் எல்லாரையும் அனுசரித்துக் கொண்டு போவார். என் எதிர்பார்ப்புகளுக்கு மேலாகவே உத்தமபுத்திரனுக்கு செட் அமைத்த கங்கா, ஸ்ரீதர் யூனிட்டில் ஓர் அங்கம் ஆனார்.

இதற்கு முன்பாகவே - அமரதீபம் எடுக்கப்பட்ட காலகட்டத்திலேயே - எங்களுடன் இணைந்தவர் அனா ருனா என்பதைச் சென்ற வாரம் சொன்னேன். திரை உலகின் சீனியர் ஃபோட்டோகிராஃபர் நாகராஜராவ் அவர்களைத்தான் அமரதீபம் படத்துக்கு ஸ்டில்கள் எடுக்க நியமித்திருந்தோம். அந்தச் சமயம் ஒரு நண்பர் அருணாசலத்தை அழைத்து வந்து, ''இவரைச் சேர்த்துக் கொள்ளுங்கள்; சினிமா ஃபோட்டோகிராஃபி என்றால் என்ன என்று தெரிந்து கொள்ளட்டும்'' என்றார். நானும் நண்பரின் சொல்லுக்குக் கட்டுப்பட்டும் புதியவர்களை ஊக்குவிக்கும் நோக்கிலும் திருச்சி அருணாசலத்துக்கு சந்தர்ப்பம் கொடுத்தேன். அவரோ, என் எதிர்பார்ப்புக்கும் மேலே போய், புதிய புதிய, அலாதியான கோணங்களில் படம் பிடித்து எனக்கு ஸ்டில்களைக் காட்டத் தொடங்கினார். அனா ருனாவின் திறமை வெகு சீக்கிரமே என்னைக் கவர, அவர் யூனிட்டில் ஒருவரானார். உத்தமபுத்திரனுக்கும் பணியாற்றினார்.

''எல்லாம் சரி, உத்தமபுத்திரனை டைரக்ட் செய்தது யார்?'' என்று நீங்கள் கேட்பது என் காதில் விழுகிறது.

ராம்நாத்துக்குப் பதில் உத்தமபுத்திரனை டைரக்ட் செய்து, அதன் வெற்றிக்கு உறுதுணையாக இருந்தவர் பிரகாஷ்ராவ்.



▶ பிரகாஷ்ராவ் - வாய்ப்புப் பெற்றார்

உங்கள் அடுத்த கேள்வியும் என் செவிகளில் ஒலிக்கிறது:

''எம். ஜி. ஆர்., தாமே நடித்துத் தயாரிப்பதாக இருந்த உத்தமபுத்திரன் என்ன ஆயிற்று?''

அந்தப் படம் எடுக்கப்படவே இல்லை. எம்.ஜி.ஆர். பெருந்தன்மையுடன் அந்தத் திட்டத்தை நிறைவேற்றாமல் விட்டுக் கொடுத்து விட்டார்!

கல்யாணப் பரிசு அடைந்த வெற்றியைப் பார்த்து விட்டுப் பல நிறுவனங்கள் என்னை டைரக்ட் செய்ய அழைத்தன. 'இந்த அழைப்புக்களை ஏற்பதா வேண்டாமா? சொந்தப் படத்தை டைரக்ட் செய்யும் போது இருக்கும் சுதந்திரம், மற்ற நிறுவனங்களில் கிடைக்குமா?' என்றெல்லாம் யோசித்து, கடைசியில், 'வீனஸ் பிக்சர்ஸிலேயே மறுபடி தமிழ் படம் எடுத்தால் டைரக்ட் செய்யலாம்; பிறருக்கு வேண்டாம்' என்று முடிவு செய்தேன்.

இந்தச் சமயத்தில் கலைவாணர் என். எஸ். கே.யின் துணைவியார், ''மதுரம் பிக்சர்ஸ்'' என்று தம் பெயரிலேயே ஒரு நிறுவனத்தை ஆரம்பித்தார். அதற்குக் கதை - வசனம் மட்டும் எழுதித் தரச் சொன்னார்கள். மதுரம் பிக்சர்ஸுக்கு ஃபைனான்ஸ் ஏற்பாடு செய்து கொடுத்ததே வீனஸ் பிக்சர்ஸ்தான். 'சகோதர நிறுவனம் போல' என்று கூடச் சொல்லலாம். அதனால் உடனே சம்மதித்து, ''அகல்விளக்கு'' என்ற தலைப்பில் திரைக் கதை - வசனம் எழுதினேன்.

'அழகா, அறிவா? ஒரு பெண்ணுக்கு எது முக்கியம்?' என்பதுதான் கதைக் கரு. 'அழகுதான் முக்கியம்; அழகியை மனைவியாக அடைந்தால் பிறகு, அவளை அறிவுள்ளவளாகவும் மாற்றிக் கொள்ளலாம்' என்று கதாநாயகன் வாதாடி, அப்படியே ஒரு நாட்டிய நங்கையை மணம் புரிந்து கொள்வான். ஆனால் அவளோ, அழகிப் போட்டிகளில் பங்கேற்று, சினிமா வாய்ப்பும் பெறுவாள். அவள் பாபுலாரிடி இவனிடம் ஒரு பாதிப்பை ஏற்படுத்த, இவன் தன் தவறை உணர்ந்து வருந்துவான். 'குடும்பத்துக்குத் தேவை, அகல்விளக்கு; அலங்கார விளக்கு அல்ல' எனப் புரிந்து கொள்வான்.

படத்தின் கதாநாயகன் எஸ். எஸ். ஆர். கதாநாயகி ஈ. வி. சரோஜா. மாடர்ன் தியேட்டர்ஸில் உதவி டைரக்டராக இருந்த ராஜகோபால் படத்தை இயக்கினார். முதல் ஷெட்யூல் படப்பிடிப்பு முடிந்தது. இரண்டாவது ஷெட்யூலைத் தொடர முடியாமல் ஒரு சிக்கல்! அதை அடுத்த இதழில் விடுவிக்கிறேனே!

# தி.மு.க.: கௌபாய்



தி. மு. க. வரலாற்றில் ஒரு ஸ்டாலின்!

அமெரிக்காவில் புதிதாக மக்கள் குடியேறி விளை நிலங்களையும் மேய்ச்சல் நிலங்களையும் தங்கச் சுரங்கங்களையும் தேடியபடி மேற்கே சென்று கொண்டிருந்த அந்த ஆதி நாட்களில், கௌபாய்கள் என்ற பிரிவினர் தோன்றினார்கள். இவர்கள் குதிரைகள் மீது ஆரோகணித்து, மாட்டு மந்தைகளை மேய்ச்சலுக்கும் விற்பனைக்கும் ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு ஓட்டிப் போவார்கள். நல்லிதயம் படைத்த இவர்கள், 'கிடார்' வாசித்துப் பாடுவார்கள். நடந்த கதை சொல்வார்கள். தீனர்களுக்கு உதவுவார்கள்.

இதே நேரத்தில் மக்களுக்குத் தொல்லை கொடுக்கும் வில்லன்களும் கௌபாய் வேஷத்தில் தோன்றினார்கள். கொள்ளை அடிப்பது, பெண்களை இம்சிப்பது என்று இந்தப் போலி கௌபாய்கள் ஆரம்பித்தார்கள். கொலைக்கும் அஞ்சாத இவர்களை எதிர்த்துப் போராடும் பொறுப்பும் மெய்யான கௌபாய்களுக்கு வந்து சேர்ந்தது. இதனாலெல்லாம் இவர்களில் பலர் பெரிய ஹீரோக்களாக உயர்ந்தார்கள். கதைகளிலும் கவிதைகளிலும் இடம்பெறத் தொடங்கினார்கள்.

இந்தக் கௌபாய்கள், சட்டத்தை மீறுவோரை எதிர்த்தார்களேயொழிய, ஒரு போதும் சட்டத்தைத் தங்கள் கையில் எடுத்துக் கொள்ளவில்லை. சட்டத்தை அமுல்படுத்த வேண்டிய அதிகாரிகளுடன் ஒத்துழைத்தே சட்டம் மீறுவோரைப் பிடித்துத் தந்து உதவினார்கள். இதில் சில சமயம் ஏமாற்றமும் ஏற்படுவதுண்டு. சட்டத்தை அமுல்படுத்த வேண்டியவர்களே வில்லன்களின் கையாளாகிப் போன தருணங்கள் இருந்ததுண்டு. ஆனாலும் கௌபாய் ஹீரோக்கள் தங்கள் கடமையிலும் கண்ணியத்திலும் தவற மாட்டார்கள்.

ஜனநாயகத்தில் எதிர்க்கட்சியினர் நடந்து கொள்ள வேண்டிய முறையும் இது தான். இவர்கள் சட்டத்தைத் தங்கள் கையில் எடுத்துக் கொள்ளக் கூடாது. அது ஆளும் கட்சியின் பொறுப்பு. ஆனால் அதே நேரத்தில் இவர்கள் குற்றம் குறைகளை எடுத்துக் கூறி, மக்கள் நலனைக் காக்க வேண்டும். ஆட்சியில் இருப்போரை வழிக்குக் கொண்டுவர முயற்சி செய்ய வேண்டும். சில சமயம் ஏமாற்றம் ஏற்படும்; பொறுத்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு நடக்கிறதா?

''எதிர்க்கட்சியின் முதல் கடமை எதிர்ப்பது'' என்றான் ஓர் அரசியல் ஞானி. இதை தி. மு. க. வும் அதன் தலைவர் கருணாநிதியும் புரிந்து கொண்டிருக்கிறார்கள். ஜெ. எதைச் செய்தாலும் சொன்னாலும் எதிர்க்கிறார்கள். ஆனால் அந்த அரசியல் ஞானி சொன்னதற்கு ஓர் உள்ளர்த்தம் உண்டு. அதாவது எந்த ஓர் அம்சத்துக்கும் மறுபக்கம் இருக்கிறது. அந்த மறுபக்கத்தைத் தெரிந்து கொள்ளும் உரிமை மக்களுக்கு இருக்கிறது. பிறகு எடை போட்டு முடிவுக்கு வருவது அவர்கள் கடமை - பொறுப்பு.

இத்துடன் நில்லாமல் எடுத்ததற்கெல்லாம் போராட்டம்; சொன்னதற்கெல்லாம் மறியல் என்று ஆரம்பித்தால் எதிர்க்கட்சி பலமிழக்கும். மக்களுடைய அலுப்பு சலிப்பைச் சம்பாதித்துக் கொள்ளும்.

மனமாற்றம் தேவை






☛ பிராமண எதிர்ப்பு என்ற துருப்பிடித்த ஆயுதம்

ஏனெனில் மக்கள் தங்கள் அன்றாட வாழ்க்கையில் அமைதி கெடுவதை என்றுமே விரும்புவதில்லை.

எனவே எதிர்க்கட்சியினர் எதிர்க்க வேண்டும்; மறுபக்கத்தை எடுத்துச் 'சொல்ல வேண்டும். ரொம்ப அவசியமான விஷயத்துக்கு மட்டுமே போராட வேண்டும். போராட்டம் என்ற ஆயுதத்தை அடிக்கடி பிரயோகித்தால் அதன் முனை மழுங்கி விடும்.

கலைஞர் இதையெல்லாம் அறியாதவர் அல்ல; ஆனால் அடிக்கடி மறந்து விடுகிறார் என்றே தோன்றுகிறது.

**தே**ர்தலில் அ. தி. மு. க. மகத்தான் வெற்றி பெற்றது எனில் தி.மு.க. மாபெரும் தோல்வி கண்டது. அந்த அதிர்ச்சியிலிருந்து மீள அவகாசம் தேவைப்பட்டது, சரி. ஆனால் அதற்குப் பிறகு? கட்சிக்குள் இந்தத் தோல்விக்கான காரணங்கள் அலசப்பட்டனவா? 'மீண்டும் மக்கள் நம்பிக்கையைப் பெறுவது எவ்வாறு?' என்று யோசிக்கப்பட்டதா? 'அதற்குத் தேவையான கொள்கை மாற்றங்கள் என்னென்ன?' என்று விவாதிக்கப்பட்டதா?

அபரிமித மெஜாரிட்டி என்பது ஆணவமாக மாறி விடக்கூடிய வாய்ப்புண்டு. தட்டிக் கேட்க ஆளில்லை என்ற இறுமாப்பு ஏற்படுவது எளிது. இந்தச் சூழ்நிலையில் எதிர்க்கட்சியின் பணிமுன்னெப்போதையும் விட சிரம சாத்தியமானது என்பது மட்டுமல்ல; முன்னெப்போதையும் விட முக்கியத்துவமும் பெறுகிறது. ஆனால் இதைத் தி. மு. க. தலைமை உணர்ந்திருக்கிறதா?

உடனடியாக விழித்துக் கொண்டு செயலாற்றவில்லையானால் கருணாநிதி ஆரோகணித்திருக்கும் குதிரை - தேர்தலையொட்டி நோஞ்சானாகிப் போன தி.மு.க. குதிரை - மேலும் பலவீனப்பட்டுப் போகும். அதற்கு உடனே போஷாக்குத் தந்து பலப்படுத்த வேண்டும்.

அண்ணா ஒருமுறை கூட்டத்தில் முன்னதாகவே பேசி விட்டுச் செல்ல வேண்டியிருந்தது. அப்போது அவர் சொன்னார் : ''நான் முன்னுரைதான் வழங்கினேன்; தம்பி கருணாநிதி முடிவுரை எழுதுவான்'' என்று! அது அந்தக் கூட்டத்தோடு நிற்க வேண்டிய கருத்து. இன்றைய தி. மு. க. வுக்கே பொருந்தும் கருத்தாக மாறி விடக் கூடாது! இதற்கு என்ன செய்வது என்று யோசிக்க வேண்டும்.

**க**ருணாநிதியும் அவர் தலைமை ஏற்றிருந்த தி. மு. க. ஆட்சியும் செய்த மிகப் பெரிய தவறு, விடுதலைப் புலிகள் விஷயத்தில் பரிவும் மெத்தனமும் காட்டியதுதான். அதை வைத்தும், ராஜீவ் படுகொலையையொட்டியும் அவர்களைத் ''தேசத்துரோகிகள்'' என்று முத்திரை குத்தி ஒதுக்கப் பார்க்கிறது இன்றைய அரசு. ராஜீவ் மரணத்துக்குப் பின்னர், புலிகள் மீது எடுக்கப்பட்ட தீவிர நடவடிக்கை



❑ காய்கறி உற்பத்தியில் உலகிலேயே இரண்டாவது இடத்தை வகிக்கும் இந்தியாவில், ஆண்டொன்றுக்கு ரூ. 3000 கோடி முதல் ரூ. 4000 கோடி மதிப்புள்ள காய்கறிகளும், பழங்களும் வீணாகிப் போவதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. நமது நாட்டில் விளையும் காய் கறிகள் மற்றும் பழங்களில் ஐந்து சதவிகிதம் மட்டுமே பதப்படுத்தப்படுவதால் இந்த நிலை! அதே சமயம் அமெரிக்காவில் 70 சதவிகித விளைச்சல் பதனப்படுத்தப்பட்டு சேமிக்கப்படுகிறது. பழ உற்பத்தியில் இந்தியா பிரேசிலுக்கும், அமெரிக்காவுக்கும் அடுத்தபடியாக மூன்றாவது இடத்தைப் பெற்றுள்ளது.

- தூவானம்

நல்ல பலன் தந்திருப்பதானது, தி. மு. க. அரசின் மெத்தனத்தை அடிக்கோடிட்டுக் காட்டுகிறது. சமீபத்திய சாந்தன் மரணம், விடுதலைப் புலிகளின் ஆயுதங்களை ஏற்றி வந்த கப்பல் பிடிபட்டது முதலிய எல்லாமே ஸி. பி. ஐ. - போலீஸ் ஆகியவர்களின் திறமையை மட்டுமின்றி, தி. மு. க. அரசின் கண்டுகொள்ளாத போக்கையும் வலியுறுத்துகின்றன.

இதிலிருந்து தி. மு. க. மீண்டு, மக்களின் நன்மதிப்பில் மீண்டும் உயர ஒரே வழிதான் இருக்கிறது. அது, ''விடுதலைப் புலிகள் விஷயத்தில் நாங்கள் தவறு செய்து விட்டோம்; ஏமாந்து போனோம்'' என்று பகிரங்கமாக அறிவிப்பதுடன், விடுதலைப் புலிகள் விஷயத்தில் கொள்கையை மாற்றிக் கொண்டு, அரசுக்குப் பூரண ஒத்துழைப்புத் தருவதாகக் கூறி, செயலாற்றவும் வேண்டும். தவறை ஒப்புக் கொண்டு திருந்த முன்வருகிறவர்கள் மீது மக்களுக்கு எப்போதுமே பரிவு ஏற்படும். இதைச் செய்யாது போனால், ''தேசத் துரோக முத்திரை'' அழிக்க முடியாதபடி ஒட்டிக் கொள்ளவே வாய்ப்பு அதிகம்!

போகட்டும்; இதர விஷயங்களுக்கு வருவோம். 'மின்கட்டண உயர்வு, ரேஷனில் பாம்ஆயில் கிடைக்காதது, அரிசி விலை வெளிமார்க்கெட்டில் கிடுகிடு ஏற்றம், ரேஷன் அரிசி அளவு குறைப்பு என்று மக்கள் கழுத்தை நெறிக்கும் பல விஷயங்களில் தி. மு. க. சக்திவாய்ந்த முறையில் செயல்பட்டிருக்கிறதா?' என்றால், வருத்தத்துடன் ''இல்லை'' என்ற பதில்தான் கிடைக்கிறது.

''பஸ் கட்டண உயர்வை எதிர்த்து நாங்கள் போராடிய போது, எந்த அரசியல் கட்சியும் ஆதரவு தரவில்லை. தி. மு. க. உதவிக்கு வரும் என்று எதிர்பார்த்து ஏமாற்றமடைந்தோம்'' என்று சொல்கிறார் மாணவர் தியாகராஜன்.

காரணம் என்ன? 'தேர்தலில் ஏற்பட்ட ஏமாற்றம், ஒரு கோபத்தை உருவாக்க, மக்கள் நலனில் தி. மு. க. வுக்கு அக்கறை இல்லாமல் போய் விட்டதா?' என்று கேட்கத்தான் தோன்றுகிறது.

மாநில அரசின் செயல்பாடு ஒருபுறமிருக்க, மத்திய அரசு வேறு தன் பங்குக்கு உர விலையை ஏற்றி விட்டது. ''மூட்டைக்கு 75 ரூபாய் ஏறியிருக்கிறது. உற்பத்திச் செலவு இதனால் உயர்ந்து விட்டது. எந்த அரசியல் கட்சியும் இதை எதிர்த்து வன்மையாகக் குரல் கொடுக்கவில்லையே! கலைஞர் எங்கள் வேதனையை உணர்ந்து தீவிரமாகப் போராடவில்லையே!'' என்று அங்கலாய்க்கிறார் குன்றத்தூர் வட்டாரத்தில் விவசாயம் புரியும் மணி.

இந்த விஷயங்களிலெல்லாம் மக்கள் துயரை அரசுக்கு எடுத்துரைத்துப் பரிகாரம் காண்பதில் தி. மு. க. எதிர்க்கட்சி என்ற முறையில் எந்த அளவுக்கு, செயல்பட்டிருக்கிறது என்று பார்த்தால் ஏமாற்றம்தான். இதிலெல்லாம் கவனம் செலுத்தாமல், பழைய துருப்பிடித்த ஆயுதமான பிராமண எதிர்ப்பை மறுபடி எடுத்துக் கொண்டிருக்கிறார் கலைஞர். 'திராவிட இயக்கம்'; 'மறுமலர்ச்சி மன்றம்' என்றெல்லாம் பேசுகிறார். இதுவா மக்களைக் கவரும் வழி? மக்கள் முன் உள்ள பிரச்னை இன்று இவையா? 'உள்ளதும் போச்சே' என்ற நிலை உருவாகத்தான் இந்தப் போக்கு உதவுமேயன்றி பயன் தராது.

காலம் மாறி விட்டது. மக்களின் மனப்பான்மையும் மாறியிருக்கிறது. ''பார்ப்பனரை எதிர்க்கவில்லை; பார்ப்பனியத்தை எதிர்க்கிறோம்'' என்பதற்கும், ''செத்த பாம்பை அடிக்கிறோம்'' என்பதற்கும் இடையில் வித்தியாசம் இல்லை. இவை, கேட்டுக் கேட்டு அலுத்து விட்ட, பழைய உளுத்துப் போன வாதங்கள்.

தெய்வத்தை மறுத்தும், பழித்தும், ஒரு சாராரை இழிவுபடுத்தியும் வோட்டுப் பெற முடியும்; மக்களைக் கவர முடியும் என்பது இனி நடக்கிற காரியமே அல்ல. கலைஞர் தம் கருத்தை மாற்றிக் கொள்ள வேண்டாம்; ஆனால் அதைத் தமது கட்சியில் பிறர் மீது திணிக்காமலாவது இருக்கலாம். இதனால் மக்கள் மன்றத்தில் கட்சியின் செல்வாக்கு பாதிக்கப்படுகிறது.

''அறிவாலயத்தில் இதுபோன்ற



# ஸ்ரீராம்

## நிறுவனங்கள் நடத்தும்

## மகாகவி பாரதியார்

## 110ஆவது பிறந்த நாள் விழா

## மற்றும் திருக்குறள் விழா



**மாணவர்களுக்குப் பரிசுப் போட்டி மொத்தம் ரூ. 20,000ம் பரிசு.**

பரிசுகள் (ஒவ்வொரு பிரிவுக்கும்)

**முதல் பரிசு ரூ. 2500/-**

**இரண்டாவது பரிசு ரூ. 1750/-**

**மூன்றாவது பரிசு ரூ. 1250/-**

முதல் பரிசு பெறும் மாணவ/மாணாக்கியர் பயிலும் பள்ளி/கல்லூரிக்கு மூன்று கேடயங்கள் (ரூ. **3,500** மதிப்பு) வழங்கப்படும்.

**மதுரை, திருச்சி, கோவை, சென்னை நகரங்களில் நடைபெறும்.**

(மாணவர்கள் என்று கூறும்போது மாணாக்கியர்களும் சேர்வர்)

**பேச்சுப்போட்டி I**

வகுப்பு 6 முதல் 8 வரை.

**பேச்சுப்போட்டி II**

வகுப்பு 9 முதல் 12 வரை.

**பேச்சுப்போட்டி III**

கல்லூரி — (பல்கலைக்கழகப் பட்டப் படிப்பு), தொழிற்கல்லூரியில் படிக்கும் மாணவ/ மாணாக்கியருக்கு மட்டும்.
(அஞ்சல் வழி மூலம் படிப்பவர்கள் நீங்கலாக)

### பேச்சுப்போட்டி நடைபெறும் நாள், இடங்கள்

**கோவை:**
30-11-91 சனிக்கிழமை காலை 9 மணி
இடம்: **மணி மேல்நிலைப்பள்ளி,**
பாப்பநாயகன் பாளையம்,
கோயம்புத்தூர்-641 037.

**திருச்சி:**
30-11-91 சனிக்கிழமை காலை 9 மணி
இடம்: **ஹோட்டல் சங்கம்,**
கலெக்டர் அலுவலக சாலை, கண்டோன் மெண்ட், திருச்சி-620 009.

**மதுரை:**
1-12-91 ஞாயிறு காலை 10 மணி
இடம்: **அமெரிக்கன் கல்லூரி,**
கோரிப்பாளையம், மதுரை-625 002.

**சென்னை:**
7-12-91 சனிக்கிழமை காலை 9 மணி.
இடம்: **பி.எஸ். ஹைஸ்கூல் செகண்டரி பள்ளி**
214, இராமகிருஷ்ணாமடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.

மற்ற விபரங்களுக்கு கீழ்க்கண்ட ஸ்ரீராம் நிறுவனக் கிளைகளை அணுகவும்.

**சென்னை:**
10, கஸ்தூரி எஸ்டேட், சென்னை-600086.
(தொலைபேசி: 454805/452113)

**திருச்சி:**
ஸ்ரீ காம்பௌக்ஸ், 21, மதுரை ரோடு,
திருச்சி-620 008. (தொலைபேசி: 34042)

**கோவை:**
406C, DG. காம்பௌக்ஸ், டாக்டர் நஞ்சப்பா சாலை, கோவை-641 018
(தொலைபேசி: 23298)

**மதுரை:**
270, மேலமாசி வீதி, மதுரை-625 001.
(தொலைபேசி: 37983)




**ஸ்ரீராம் நிறுவனங்கள்**

10, கஸ்தூரி எஸ்டேட், சென்னை-600 086.
தொலைபேசி: 454805/452113.

ADWAVE/SGC/4326 A

செயல் திட்டங்கள் பற்றி அறிவார்ந்த சர்ச்சை நடக்கிறதா; அல்லது சீட்டுக் கச்சேரிதான் நடக்கிறதா?'' என்று தி. மு. க. வினரே பலர் முணுமுணுக்கிறார்கள். அது கலைஞர் காதில் விழாமல் இருக்கலாம்; நமக்குக் கேட்கவே செய்கிறது. இந்த முணு முணுப்பில் அவரது தோழமைக் கட்சி களும் சேர்ந்திருக்கின்றன.

பிராமண எதிர்ப்பைக் கலைஞர் மீண் டும் ஆரம்பித்திருப்பதை கம்யூனிஸ்ட் கட்சியினர் விரும்பவில்லை. தேசிய ஒரு மைப்பாடு கூட்டத்தில் அவர் கலந்து கொள்ளாததையும் அவர்கள் வருத்தத் துடன் விமர்சிக்கிறார்கள்.

கலைஞர், சட்டசபைக்குச் சென்று மக்கள் பிரச்னைகளைப் பேசுவார் என்று பலரும் எதிர்பார்த்தார்கள். அவரோ ராஜி னாமா செய்து ஏமாற்றி விட்டார்.

''எதற்கு ஸார் அவர் சட்டசபைக்குப் போகணும்? எங்கள் உறுப்பினர் பரிதியின் வேஷ்டியை உருவியதைப் போன்று, கலைஞர் வேஷ்டியையும் உருவி, அவ மானப்படுத்தி இருப்பார்கள். ஆனால் பத்திரிகைகள் கண்டுகொள்ளாது! காரணம், கலைஞர் பிராமண ஜாதி இல்லையே!'' என்று கோபத்துடன் சீறுகிறார் கலைஞரின் தீவிர ஆதரவாளர் ஒருவர்.

ஆனால் இதைவிட அபத்தமான வாதம் ஒன்று இருக்க முடியாது. இன உணர்வின் அடிப்படையில் 'ஜெ'. ஆட்சி யைப் பத்திரிகைகள் ஆதரிப்பதாகத் தி. மு. க. தலைமை எண்ணினால், அது கற்பனை தானேயன்றி, உண்மையல்ல. தவறு நடந் துள்ள எந்த ஒரு விஷயத்திலும், மக்கள் நலனுக்கு விரோதமான எந்த ஓர் அம்சத் திலும் பொறுப்புள்ள பத்திரிகைகள் 'ஜெ'. ஆட்சியைத் தட்டிக் கேட்கத் தயங்கியதே இல்லை.

தொண்டர்கள் சோர்ந்து போயிருப்பது நிஜம். அந்தச் சோர்வை மேலும் அதி கரிக்கச் செய்து வருகிறது தலைமையின் போக்கு என்பது அதைவிட உண்மை.

'' 'ரஷ்ய வரலாற்றிலே ஒரு ஸ்டாலின்; தி. மு. க. வரலாற்றினிலே ஒரு ஸ்டாலின்' என்று மேடையில் பாடுகிறார்கள்! அழி வுக்கு இதுபோன்ற விஷயங்களே போதும்'' என்கிறார் தொண்டர் கருணாகரன். ''இரவு பகல் பாராமல் தொண்டர்கள் கட்சிப் பணியாற்றிய காலம் போய், இன்று போஸ்டர் ஒட்டக்கூட கூலி கொடுத்து ஏற்பாடு செய்ய வேண்டியிருக் கிறது'' என்று அங்கலாய்க்கிறார்.

'தலைவர் ஒதுங்கிக் கொள்ளட்டும்' என்று கூறாது போனாலும், 'ஒரு working president ஐ நியமிக்கலாம்' என்று கூறு வோர் தி. மு. க.விலேயே இருக்கிறார்கள். 'கட்சி மீண்டும் நல்ல நிலைக்கு வர, வண்ண விளக்குகளும் மேடைப் பேச்சும் வேண்டாம்; மக்களின் அன்றாடப் பிரச் னைகளைத் தீர்த்து வைப்பதில் தொண்டர்கள் இறங்க வேண்டும்' என்று இவர்கள் கருதுகிறார்கள். 'ரேஷன் கார்டு பெற்றுத் தருவது, சாலை சீர்படப் போரா டுவது என்று இறங்க வேண்டும்; ஒரு ''நிழல் மந்திரி சபை'' அமைத்து, புதிய கொள்கைகளை உருவாக்க வேண்டும்; அறிவாலயத்தில் கம்ப்யூட்டர் நிறுவப் பட்டு ஒன்றியச் செயலாளர்களின் கட்சிப் பணி பரிசீலனைக்கு உள்ளாக வேண்டும்; மைக்ரோஃபோனை வைத்துக் கொண்டு வீதி வீதியாகப் பிரசாரம் பண்ண வேண்டும்' என்றெல்லாம் இவர்கள் எண்ணுகிறார்கள்.

ஆனால் கருணாநிதியோ, 'கேவலம் ஜெயை எதிர்த்துப் பாலிடிக்ஸ் பண்ண வேண்டியிருக்கிறதே' என்பது போல் பேசி, செயல்படுகிறார். இது தொண்டர் களுக்கும் தீவிரமாகச் செயல்பட முடியாத தர்மசங்கடத்தை உண்டாக்குகிறது.

முதல்வர் ஜெயிடமும் மனமாற்றம் தேவை. 'நல்லதொரு ஜனநாயகத்துக்கு எதிர்க் கட்சியின் பணி இன்றியமையாதது' என்பதை அவர் உணர்வாரேயானால், தி.மு.க. வையும் அதன் தலைவரையும் விரோதியாகப் பாவித்து ஒடுக்கக் கருதா மல், எதிர்த் தரப்பினராக மட்டுமே எண்ணு வார். அவர்களுக்கு உரிய மதிப்பை அளித்து, அவர் நடந்து கொள்வதுதான் அவருக்கும், பெருமை; ஜனநாயகத்துக்கும் நன்மை.

---

☐ மிதக்கும் ஓட்டல் ஒன்று திருவனந்த புரத்தில் தொடங்கப்பட்டுள்ளது. இது கடலி மிதந்தபடியேதான் இருக்கும். ''ராஜா ரெஸ்டா ரண்ட்''டுக்கு ஒரு படகில் போய்ச் சே வேண்டும். ஒரே நேரத்தில் 50 பேர்கள் சாப்பிட லாம். இந்த ஓட்டல் அமைக்க ரூ. 15 லட்சம் செலவாகி உள்ளது. எல்லா வசதிகளும் கொண்ட இதில், மின்சாரம் ஜெனரேட்டர் மூலம் எடுக்கப் படுகிறது.

- எஸ். எஸ். மணி

# தமிழக கிரிக்கெட்டில் காமராஜர்!

அண்மையில் வைரவிழா கொண்டாடிய தமிழ்நாடு கிரிக்கெட் சங்கத்தைப் பற்றிய மலரும் நினைவுகளை நம்முடன் பகிர்ந்து கொள்பவர், அதன் செயலாளராக முப்பது வருடம் இருந்த எஸ். ஸ்ரீராமன்.

●● இப்போது தமிழ்நாடு கிரிக்கெட் சங்கம் என்று வழங்கப்படும் இந்த சங்கத்திற்குத் தொடக்க காலப் பெயர்: இந்தியன் கிரிக்கெட் ஃபெடரேஷன். 1930ல் ஆரம்பிக்கப்பட்டது. டாக்டர் சுப்பராயன் (ரங்கராஜன் குமாரமங்கலத்தின் தாத்தா) தான் முதல் தலைவர். கோவிந்தராஜுலு என்பவர் செயலாளராக இருந்தார். அவர் சைக்கிளிலேயே நகரம் முழுவதும் சுற்றி, பல்வேறு கிரிக்கெட் கிளப்புகளை, ஒருங்கிணைக்கும் பணியை மேற்கொண்டார்.

●● சுதந்திரத்திற்கு முன்பு எங்கள் சங்கத்துக்கும், முழுக்க முழுக்க வெள்ளைக்காரர்களையே உறுப்பினர்களாகக் கொண்ட எம்.சி.சி. (மதராஸ் கிரிக்கெட் கிளப்) அணிக்கும் இடையே ஆண்டு தோறும் பொங்கல் சமயத்தில் கிரிக்கெட் போட்டி நடக்கும்.

●● 1952 வரை சேப்பாக்கத்தில்தான் கிரிக்கெட் போட்டிகள் நடந்தன. அப்



ஸ்ரீராமன்



1987 - '88 - ல் ரஞ்சிக் கோப்பையை வென்ற தமிழக கிரிக்கெட் அணி. பின்னணியில் சிதம்பரம் ஸ்டேடியம்



எம். ஏ. சிதம்பரம்



காமராஜர் : 'ஓ.கே.' என்றார்!



1951 - '52 - ல் சேப்பாக்கம் மைதானம்

போது நிரந்தரமான காலரிகள் இல்லாததால், வருடந்தோறும் காலரி அமைக்க நிறையச் செலவாயிற்று. அதனால் 1954 முதல், நேரு ஸ்டேடியத்தில் போட்டிகள் நடந்தன. 1966க்குப் பிறகு சேப்பாக்கத்தில் மீண்டும் போட்டிகள் நடக்க ஆரம்பித்தன.

●● 1964-ல், சேப்பாக்கம் மைதான குத்தகை முடியும் தறுவாயில் இருந்தது. அதை நீட்டிக்க, அரசுடன் தொடர்பு கொண்டிருந்தோம். காமராஜ்தான் முதல்வர். தலைவர் எம்.ஏ. சிதம்பரமும், நானும் முதல்வரைச் சந்தித்தோம். ''உங்களுக்கு ஏன் அந்த நிலத்தைத் தர வேண்டும்? கஸ்தூரி பாய் காந்தி ஆஸ்பத்திரியை விஸ்தரிக்க அந்த நிலம் எங்களுக்குத் தேவைப்படுகிறது'' என்றார் அவர். உடனே நாங்கள், ''உலக கிரிக்கெட் வரலாற்றில் சேப்பாக்கத்துக்குத் தனி இடம் உண்டு. லார்ட்ஸ், மெல்போர்ன், போன்று சேப்பாக்கமும், கிரிக்கெட்டுக்கான முக்கிய மையம். இந்தப் பெருமை போய் விடக் கூடாது. ஆஸ்பத்திரி கட்ட வேறு இடம் கண்டிப்பாகக் கிடைக்கும். சேப்பாக்கம் என்றாலே கிரிக்கெட்தான் ஞாபகம் வரும்'' என்று பலவிதமாய் எடுத்துச் சொன்னோம். கவனமாகக் கேட்டுக் கொண்டு கொஞ்ச நேரம் யோசித்தார். நியாயத்தை உணர்ந்ததும் தயக்கமின்றித் தமது கருத்தை மாற்றிக் கொண்டு OK என்றார். காமராஜருக்குத் தமிழக கிரிக்கெட் ரொம்பக் கடமைப்பட்டிருக்கிறது.

●● சேப்பாக்கம் ஸ்டேடியம் கிட்டத்தட்ட மூன்று கோடி ரூபாய் செலவில் உருவாக்கப்பட்டது. அதற்கு எம். ஏ. சிதம்பரம் பெயர் சூட்டப்பட்டது மிகப் பொருத்தம். பரப்பளவு சுமார் 20 ஏக்கர். வங்கிகள் உதவியிருக்கின்றன. தி.மு.க. அரசு எங்களுக்கு உதவியிருக்கிறது. அ. இ. மு. க. அரசு சொத்து வரியிலிருந்து விலக்கு அளித்தது. இந்தியாவிலேயே இரண்டாவது பெரிய ஸ்டேடியம் சேப்பாக்கம். 55000 பேர் அமர்ந்து பார்க்கலாம். 1980க்கு முன்னர் ஸ்டேடியம் முழுக்க நிரம்பி வழியும். ஆனால், டீ.வி.யில் நேரடி ஒளிபரப்பு வந்த பிறகு ஸ்டேடியம் நிரம்புவதில்லை.

●● தமிழ்நாடு கிரிக்கெட் சங்கம், பல இளைஞர்களை ஊக்குவித்துத் தேசிய அளவில் ஆடப் பயிற்சி கொடுத்திருக்கிறது. தமிழ்நாட்டிலிருந்து இதுவரை 27 பேர் இந்திய அணிக்காக விளையாடி இருக்கிறார்கள். இவர்களை ஜொலிக்க வைத்ததில் டி. என். சி. ஏ.க்குப் பெரும் பங்கு இருக்கிறது. எம். ஜே. கோபாலனில், ஆரம்பித்து டபிள்யூ. வி. ராமன் வரையில், எல்லோரும் சங்கத்திற்குப் பெருமை சேர்த்திருக்கிறார்கள்.

●● சேப்பாக்கம் மைதானத்தில் பல குறிப்பிடத்தக்க போட்டிகள் நடந்திருக்கின்றன. 1986-ல் ஆஸ்திரேலியாவுக்கும் நமக்கும் நடந்த ஆட்டம் Tie யில் முடிந்தது. உலகிலேயே இதுவரை இரண்டு போட்டிகள்தான் Tie -ல் முடிந்திருக்கின்றன. ஒரு டெஸ்ட் மாட்சில் 18 விக்கெட்டுகள் எடுத்து ஹிர்வானி சாதனை நிகழ்த்தியதும் இங்கேதான்.

●● இப்போது சங்கத் தலைவராக இருப்பவர் பாலு அழகண்ணன். சங்கம் பல நல்ல பணிகளுக்கு உதவியிருக்கிறது. பாகிஸ்தானுடன் போர் நடந்த போது நிதி வழங்கியிருக்கிறோம். ஓய்வு பெற்ற ஆட்டக்காரர்களுக்கு உதவித் தொகை வழங்குகிறோம்.

தொகுப்பு : ப்ரியன்

## அடுத்த இதழ் : மதுரை மாநகரச் சிறப்பிதழ்



●● வைகை நதியைச் சுத்திகரிக்க முடியுமா?

●● உசிலம்பட்டிப் பெண்கள்: பெண் குழந்தைகளையே அதிகம் கருத்தரிப்பதேன்?
- மதுரை மாணவர் ஆய்வு

●● ஒலிம்பிக் போட்டிக்குத் தயாராகும் சகோதரிகள்

●● மதுரை மாநகர அரசியல்!

●● ''நான் பெண் என்பதாலேயே புகார் மனுக்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது!''
- மதுரை கலெக்டர் பேட்டி

**இன்னும் ஏராளச் செய்திகள்
உங்கள் பிரதிக்கு உடனே
முந்துங்கள்**



## தீபாவின் இப்படம் எடுக்கப்பட்டு ஒரு வருடத்திற்கும் மேலாகிறது.

## இது அவள் கடைசியாக சிரித்துக் கொண்டு இருந்த போது எடுத்த படம்.

அவளுக்கு வயது மூன்று. என்ன நடக்கிறது என்பது அவளுக்கு தெரிந்திருக்க வாய்ப்பில்லை. அவளைப் பார்த்து புன்னகைப்பவர்கள், அவளின் பெற்றோரை பார்த்து ஏதோ முணு முணுக்கிறார்கள்.

ஏன் தொடர்ந்து ஊசி போடுகிறார்கள் என்பது விளங்கவில்லை அவளுக்கு. தாங்க முடியாத வலியும் நின்றபாடில்லை மற்ற குழந்தைகள் அவளுடன் விளையாட வருவதில்லை. வீடு எப்பொழுதும் அமைதியாக இருக்கிறது. அம்மா அடிக்கடி அழுகிறாள். வலி தாங்க முடியாத பொழுது கடவுளை வேண்டிக் கொள் என்று அப்பா சொன்னது நினைவுக்கு வருகிறது.

அவளுக்கு வந்திருப்பது கொடிய இரத்தப் புற்று நோய். கடவுளின் கையில் பொறுப்பை விடுவதற்கு முன் நம்மால் முடிந்ததை செய்யவேண்டும் என்பது நமது எல்லோருக்கும் புரிந்த ஒன்று.

டாக்டர்கள் இரத்தம் மாற்றுதல், ரேடியேஷன் தெரபி, கீமோ தெரபி என எல்லா சிகிச்சையும் செய்து பார்த்துவிட்டனர். பலனில்லை. கடைசியாக ஒரே நம்பிக்கை போன் மேரோவ் (எலும்பின் உட்பகுதி) மாற்றுதல். அதுவும் சில வாரங்களுக்குள் செய்தாக வேண்டும். இந்த அறுவை சிகிச்சைக்கு பணம் நிறைய தேவைப்படுகிறது.

தீபாவின் தந்தை ல.ர. சுவர்ணா தம் கையிலுள்ளதையெல்லாம் ஏற்கனவே செலவழித்துவிட்டார். அவருடைய உறவினர் மற்றும் நண்பர்கள் என்ற முறையில் எங்களால் முடிந்ததை நாங்கள் செய்துள்ளோம். இருப்பினும் பணம் போதவில்லை. எனவேதான் இந்த வேண்டுகோள். தீபாவின் உயிரைக் காப்பாற்ற உங்களால் முடிந்ததை உதவுங்கள். நன்றியுடன் ஏற்றுக் கொள்கிறோம்.

உங்களது நன்கொடையை அனுப்பவேண்டிய முகவரி :

Child Development Charitable Trust,
C/o. A-203, Neelam Centre,
S.K. Ahire Marg, Worli,
Bombay - 400 025.

தொகையை "சைல்டு டெவலப்மெண்ட் சாரிட்டபிள் ட்ரஸ்ட்" என்ற பெயருக்கு அனுப்பவேண்டும்.
வருமானவரி சட்டம் பிரிவு 80-G யின் கீழ் இதற்கு வருமானவரி கழிவு உண்டு.

கருணாநிதி
ஜெயலலிதா
விடுதலைப் புலிகள் மீது வெற்றிகரமான நடவடிக்கைகள்

பாகிஸ்தானைக் கண்டிக்கிறோம்... பாதுகாப்புப் படையினரைப் பாராட்டுகிறோம்...
இந்தத் தரை ஒருத்தர் கூட்டாவே அடிச்சுக்கிறோம்... தீர்மானம் மட்டும் ஏகமனதா இருந்தா சரி!
சர்வ கட்சி காஷ்மீரத் தலைவர்கள் மாநாடு

ஐ.நா. சபையில் பாகிஸ்தான் தீர்மானம்
ஆதரவு வாக்களித்த 104 நாடுகள்
பேஷ்! பேஷ்...
அடடா, நான்!
ஆஹா, என்ன அழகு...
இதுதாங்க, நான் சொன்ன அணு ஆயுதமற்ற பிராந்தியம்!
பாகிஸ்தான்
கண்றாவி... யாரு இது? சகிக்கலே!
இந்தியா உட்பட எதிராக வாக்களித்த 3 நாடுகள்

# ஆயாராம் - கயாராம் : மக்கள் மன்றத்துக்குச் செல்வாராம்!

கட்சித் தாவல் என்பது கலபமாகப் பணம் பண்ணுவதற்கு ஒரு வழி. அதிலும் சட்டமன்றத்தில் அல்லது நாடாளுமன்றத்தில் ஆளும் கட்சி போதிய பலமற்றதாக விளங்கினால் 'ஆயாராம் - கயாராம்'களுக்குப் படு குஷி! இங்கிருந்து அங்கு போகப் பணம்; அங்கிருந்து இங்கு திரும்பி வரப் பணம் என்று வாங்கினார்கள். கட்சி மாறாமல் இருக்க, எம். எல். ஏக்களைப் பலமுறை கண்காணாத இடத்தில் மறைத்து, ஒளித்து வைக்க நேர்ந்ததும் உண்டு.

கட்சித் தாவல் தடுப்புச் சட்டம் இந்த அநாகரிகத்துக்கு ஒரு முடிவு கட்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் அதுவும் நடக்கவில்லை. 'தனிநபர்கள் கட்சி மாற முடியாது; ஒரு கோஷ்டியாக மாறலாம்; குறைந்தபட்சம் இத்தனை சதவிதம் அங்கத்தினர்கள் கோஷ்டியாக வெளியேற வேண்டும்' என்ற சட்டம் லஞ்சச் செலவைக் கூட்டியதே தவிர கட்சித் தாவலைத் தடுக்கவில்லை. ஆனால் அதே நேரத்தில் ஒரு தனிநபர் மெய்யாலுமே தன் கட்சியில் அதிருப்தி கொண்டு, மனச்சாட்சிப்படி வெளியேற நினைத்தால் அது முடியாமல் போயிற்று. இந்த இருவித அநீதிகளுக்கும் மேலாக மூன்றாவது பெரிய அநீதி சபாநாயகரின் நடத்தை. பெரும்பாலும் சபாநாயகர் கட்சிக் கண்ணோட்டத்தில் ஆளும் கட்சியால்தான் நியமிக்கப்படுகிறார். கட்சித் தாவல் தடுப்புச் சட்டத்தின்படி தீர்ப்பு வழங்க வேண்டிய உரிமை அவரிடம் உள்ளபடியால், ஆளும் கட்சிக்குச் சாதகமாகவே அவர் நடந்து கொண்டு தீர்ப்புக்களை அளிப்பது சகஜமாகி விட்டது.

இந்த அநீதிகளையெல்லாம் பொறுக்க முடியாமல்தான், 'கட்சித் தாவல் தடைச் சட்டமே செல்லாது' என்பதாக உச்சநீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்கப்பட்டது. அதற்கு வழங்கப்பட்டுள்ள மெஜாரிட்டி தீர்ப்பு, கட்சித் தாவல் தடைச் சட்டத்தை ஏற்கிறது; ஆனால் சபாநாயகரின் தீர்ப்பை எதிர்த்து வழக்குப் போட முடியாது என்ற அம்சத்தை ஏற்காமல் நிராகரித்து விட்டது. சபாநாயகரின் தீர்ப்பு தவறானது என்று கருதினால், பாதிக்கப்பட்டவர் நீதிமன்றத்தில் முறையிடலாம் என்று உரிமை வழங்கப்பட்டுள்ளது.

இது, சட்டமன்றத்தின் - சபாநாயகரின் - அதிகாரங்களைக் கட்டுப்படுத்துவதாகச் சிலர் கருதக்கூடும். சட்டமன்றத்துக்கும் நீதிமன்றத்துக்கும் இடையே அடிக்கடி அனாவசிய மோதல் நிகழ்வதைச் சாத்தியமாக்கும்.

எனவே, கட்சி மாறல் தடைச் சட்டத்தின் அடிப்படையில் யாரேனும் கட்சி மாறியதாகக் கருதப்பட்டால் அவர் அல்லது அவர்கள் உண்மையில் கட்சி மாறினரா, உறுப்பினர் பதவியை இழக்க வேண்டியவர்கள்தானா என்பதை நிர்ணயிக்கும் உரிமையைத் தேர்தல் கமிஷன் போன்ற சுதந்திர அமைப்பிடம் விட்டு விடலாம் என்பது தெரிவிக்கப்பட்டுள்ள பல யோசனைகளுள் ஒன்று.

இதையெல்லாம் அலசி ஆராய்ந்து கட்சித் தாவல் தடுப்புச் சட்டத்தில் தேவையான மாற்றங்களைச் செய்ய வேண்டியது அரசின் - நாடாளுமன்றத்தின் கடமையாகிறது. இதில் சர்வ கட்சிகளும் ஆலோசனை நடத்தி முடிவெடுக்கும் போது மேலும் ஒரு அம்சத்தையும் எண்ணிப் பார்க்கலாம்.

அதாவது, ஒரு நாட்டின் மன்னர்கள் வாக்காளர்களே என்னும் போது, ஒரு எம். பி. அல்லது எம்.எல்.ஏ.யை மக்கள் ஒரு கட்சியின் பிரதிநிதி என்ற முறையில் தேர்ந்தெடுத்தார்களா அல்லது அந்தத் தனிநபரின் அறிவாற்றல் - செல்வாக்கு கருதி தேர்ந்தெடுத்தார்களா என்பதுதான்.

எனவே, மக்கள் பிரதிநிதிகள் தனிநபராகவோ அல்லது கோஷ்டியாகவோ கட்சி மாற எண்ணினால் அவர்கள் தனித்தனியே மக்களின் அனுமதி பெற்று வர வேண்டும் என்று ஏற்படுத்தினால் பிரச்னையே இராது. இதற்கான விதிமுறைகளை வகுப்பது சாத்தியமே. மெய்யாலுமே தக்க காரணத்துக்காகக் கட்சி மாற எண்ணுவோர், அதை மக்களிடம் எடுத்துரைத்து ஒப்புதல் பெற்று வரலாமே. எம். பி. அல்லது எம்.எல்.ஏ.க்களை விலைக்கு வாங்குவது என்ற பேச்சுக்கே இடமில்லாமல் போகுமே.



கல்கி




1991
நவம்பர் 24
மலர் : 50
இதழ் : 17
பிரஜோத்பத்தி
கார்த்திகை 8

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்தின் நட்புக்கு

# "யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்தி டிவியில் கண்டோம், நாங்க அதிசயிதக்க தூய்மை மு




தினமும் யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்தின் நட்புக்குரிய நபர் நவீன தூய்மை மற்றும் சுகாதாரத்தின் நற்பயன்களை குடும்பங்கள் அறிந்து கொள்ள உதவுகிறார்.

நீங்களும் அவரை வரவேற்கலாம். வசதியான உங்கள் வீட்டில் அவர் யூரோக்ளீன் மைட்டி வேக் தூய்மை முறையை இயக்கிக் காட்டுவார். மற்றும் கண்ணுக்குப் புலப்படாத தூசு மற்றும் அழுக்குகளிலிருந்து வீட்டை தூய்மையாக வைக்கும் எளிதான வழிகளை விளக்குவார்.

அக்வாகார்ட் ஆன்லைன் வாட்டர் ஃபில்டர்-கம்-ப்யூரிஃபையரின் ஸ்விட்சை இயக்கியதும் தூய பாதுகாப்பா குடிநீர் பெறும் வழியையும் உங்களுக்குக் காட்டுவார்.

யூரேகா ஃபோர்ப்ஸ் நிறுவனத்திலிருந்து வரும் நட்புக்குரிய நபரின் பேச்சில் நம்பிக்கை தொனிக்கும். இது இயற்கையே. ஏனெனில், இந்தியாவில் உள்ள இது போன்ற நிறுவனங்களில் மிகப் பெரியதும் மற்றும் வெற்றியுடன் திகழும் விற்பனை நிறுவனத்தின் உறுப்பினர் ஆவார். இந்நிறுவனம், விற்பனைக்குப் பின் நம்பகமான சேவை பிணையத்தைக் கொண்டது

# அன்புள்ள அம்மு,

நேற்று வாராந்திர லேடீஸ் கிளப் கூட்டம். வழக்கமான சமையல் குறிப்புப் பரிமாற்றங்களுக்குப் பிறகு, பேச்சு, சமீபத்தில் முடிந்த டி.வி. சீரியல் பக்கம் திரும்பிற்று. 'அவளுக்கென்று ஓர் இடம்' எல்லார் இதயத்திலும் 'முதலிடம்' பெற்று விட்டது! வானளாவ அவர்கள் புகழ்ந்ததை மறுத்துப் பேச நான் முயன்ற போது என் வெண்கலக் குரல் கூட எடுபடவில்லை! சரி; நம் விமர்சனத்தை வழக்கம் போல் அம்முவுக்கு எழுதலாம் என்று விட்டு விட்டேன்.

கதாநாயகி அனுவைப் போல் பொறுமையின் சிகரமாக ஒரு பெண் இருப்பது தற்காலத்தில் பெருமைக்குரிய ஒரு விஷயமேயில்லை என்பது என் கருத்து. லக்ஷ்மி அந்த நாவலை எழுதிய பிறகு பெண்மை பற்றிய சிந்தனை முற்போக்குப் பாதையில் மைல் கணக்கில் முன்னேறிவிட்டது. புருஷன் வீட்டாரால் வஞ்சிக்கப்பட்டாலும் அவர்களுக்கு விசுவாசமாக, பொறுமையுடன் இருக்கும் ஒரு பெண்ணை இன்றைக்குப் பார்க்க முடியுமா? அல்லது அப்படி ஒரு பெண் இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பதுதான் நியாயமா?

அப்படியிருக்கையில், ஒருவேளை சென்ற தலைமுறைக்குப் பொருந்தக் கூடிய ஒரு கதையை, அது எழுதப்பட்ட காலம் சூழ்நிலை பற்றிய குறிப்பு ஏதும் இன்றி வாரா வாரம் ஒளிபரப்பியிருக்கிறார்கள்.

குறையே இல்லாத, குணக்குன்றான ஒரு கதாநாயகி அனு! (திகட்டத் திகட்ட சுவீட் சாப்பிடுகிற மாதிரி) அவளை எதிர்க்கும் நாத்தனாரும் மைத்துனனும் மனம் மாறுவதற்கென்று செயற்கையாய்த் திணிக்கப்பட்ட சம்பவங்கள். வில் சேரிலிருந்த தாத்தா, கடைசிக் காட்சியில் ஆபரேஷன் இன்றி, திடீரென்று எழுந்து நடப்பது; மரணத்தின் பிடியிலிருந்து மீட்கப்பட்ட வில்லியை, சுபமுடிவை உத்தேசித்து, சௌகரியமாக மீண்டும் பலிகொடுப்பது... சல்லடை மாதிரி ஓட்டைகள்!

கதாசிரியை லக்ஷ்மியிடம் எனக்கு மதிப்பும் மரியாதையும் இருக்கிறது. ஆனால் அவர் பெண்மையைச் சித்திரித்த - அதுவும் இந்தக் கதையில் - காலகட்டம் வேறு; பெண்மை குறித்து இன்றைய நவீன சிந்தனை வேறு.

நம் டி.வி. நிலையத்தினர் இதைப் பற்றியெல்லாம் எண்ணிப் பார்த்தால் தானே! அவர்களைச் சொல்லியும் குற்றமில்லை. கண்கள் கலங்க மூக்கைச் சிந்தியபடி வாரா வாரம் பார்க்க, பெண்களே லட்சக்கணக்கில் தயாராய் இருக்கிறார்களே!

''இவ்வளவு கடுமையாக விமர்சனம் செய்கிறியே! நீ மட்டும் ஏன் பார்த்தாய்?'' என்று நீ மனதுக்குள்ளேயே கேட்பது தெரிகிறது. எதிர்பார்ப்புடன் பார்க்க ஆரம்பித்தேன், ஏமாற்றமடைந்தேன். பிறகு ஒரு எதிர்ப்பைத் தெரிவிக்கத் தொடர்ந்து பார்த்தேன். என்னுடைய இந்த எதிர்ப்பு ஓர் ஒற்றைக் குரலாக இருந்தாலும் சரி, சொல்லி விடுகிறேன் : டி.வி. நிலையத்தினர் தொடர்ந்து பெண்களைப் பொறுமையின் பூஷணங்களாகவே சித்திரிக்காமல் அநீதிகளை எதிர்த்துப் போராடவும் தெரிந்தவர்களாகச் சித்திரித்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்?

இப்படிக்கு,

ஒரு தார்மீகக் கோபத்துடன்

- அலமு





# தாலாட்டு கேக்குதம்மா

தலைப்பையும் ஸ்டில்களையும் பார்த்து விட்டு, 'சரிதான், இன்னுமொரு கிராமத்துக் கதைதான் போலிருக்கிறது' என்கிற அலுப்போடு அரங்கினுள் போய் அமர்ந்தால்... வாட் எ ப்ளஸன்ட் சர்ப்ரைஸ்!

ஒரு மனத் தத்துவப் பிரச்னையை அடித்தளமாகக் கொண்டு எழுப்பப்பட்ட எளிமையான, அழகான கட்டடம் - கதை. ஒரே சீராகக் குழப்பம் இல்லாமல் கோத்துச் செல்லப்பட்டுள்ள நிகழ்ச்சிகள்.

ஒரு கிராமத்தில் நிகழ்வதாக அல்லாமல், இதையே நகரத்தில் நடைபெறுவதாகச் சித்திரித்து, சைக்கியாட்ரிஸ்ட் அது இது என்று சுற்றத் தொடங்கி மனத் தத்துவப் பாடப் புத்தகமாக ஆக்கி விடாமல் தவிர்த்திருப்பது இயக்குனர் ராஜ் கபூரின் பிளஸ் பாயின்ட்.

வெகுளியான கிராமத்துப் பெண் கனகா, அவருடைய நெருங்கிய தோழி பிரசவத்தின் போது சிக்கல் ஏற்பட்டுத் துடிதுடித்து உயிரிழப்பதை அருகிலிருந்து பார்க்க நேர்ந்து விட, மனத்தில் ஆழமாகப் பதித்துக் கொண்டு விடும் பயம் : 'கருத்தரித்துக் குழந்தை பிறந்தால் உயிர் போய் விடும்!'

இந்தப் பயத்தை வெளிப்படுத்துவதிலும், திருமண உறவை நிறைவு செய்வதை எதிர்த்துப் போராடித் தோல்வியடைந்து குமுறுவதிலும் கனகா அடிப்பது செஞ்சுரி என்றால் -

அவருடைய உணர்வுகளைப் புரிந்து கொண்டு, அந்தப் பயத்தைக் களைவதற்காக மேற்கொள்ளும் முயற்சிகளிலும் அவை தோல்வியடைவதைக் கண்டு குமுறுவதிலும் பிரபு அடிப்பது டபுள் செஞ்சுரி.

ஒரே மாதிரியான சம்பவங்களே தொடர்ந்து இடம்பெறுகின்றனவோ என்று தோன்றும் கணத்தில் சில்க் ஸ்மிதா அறிமுகம்.

வாழ்க்கையில் பெற்று விட்ட ஏமாற்றத்தை வெளித் தெரியாமல் உள்ளுக்குள்ளேயே புதைத்து விட்டுப் பரிவையும் அனுசரணையையும் வெளிப்படுத்தும் டாக்டர் - அடக்கமான வெளிப்பாடுகள் + சில்க் ரசிகர்களை ஏமாற்றாமல் இருக்க ஒரு கனவுக் காட்சி!

படத்தின் ஒவ்வொரு துறையிலுமே நட்சத்திர வாரிசுகள் - நாயகன், நாயகி, படப்பிடிப்பு, எடிட்டிங் என்று. ஒரு வகையில் இவர்கள் அனைவருமே சிறப்பாகச் செய்திருக்கிறார்கள் என்றால் இன்னொரு வகையில் -

பிரபுவுக்கு 'தாலாட்டு' ஒரு 'பூஸ்ட்'.

- சி. ஆர். கே.



போட்டிக் கதை - 13

அறிமுக எழுத்தாளர்

# பிச்சை பகிறும்...

எஸ்.பி. வீரப்பன்

"படித்த பையன் வேலைக்குத் தேவை" - கந்தசாமி அண்ட் சன்ஸ் கடை வாசலில் இருந்த போர்டைப் பார்த்ததும் சங்கரனின் உடலிலுள்ள அத்தனை அணுக்களும் சுறுசுறுப்பாகி விட்டன. சைக்கிளை மிக வேகமாக வீட்டை நோக்கி மிதித்தான்.

'கந்தசாமி அண்ட் சன்ஸ் மளிகை அண்ட் ஜெனரல் ஸ்டோர்ஸ்' ஊரிலேயே பெரிய கடை. குட்டி ஸ்பென்ஸர் என்று கூடச் சொல்லலாம். 'அந்தக் கடையில் படித்த ஆள் கேட்கிறார்கள் என்றால் அக்கௌண்ட்ஸ் பார்ப்பதற்காகத்தான் இருக்கும். கடை முதலாளி கந்தசாமி நல்ல மனுஷன் என்றுதான் கேள்வி. சம்பளமும் நன்றாகக் கொடுப்பார். வேறு யாரும் போவதற்குள் நாம் முந்திக் கொள்ள வேண்டும்' யோசித்துக் கொண்டே சென்ற சங்கரன், வீட்டை அடைந்தான். டிரங்குப் பெட்டியைத் திறந்து சர்டிபிகேட் பையைக் கையில் எடுத்துக் கொண்டு சைக்கிளில் தாவி ஏறினான்.

மதியம் மணி 12.30. வெயில் உக்கிரமாகக் கொளுத்தியது. கடையில் அவ்வளவாகக் கூட்டமில்லை. சைக்கிளை ஓர் ஓரமாக நிறுத்தி விட்டு, சங்கரன் கடைக்குள் நுழைந்தான். கல்லாவில் உட்கார்ந்து பணத்தை எண்ணிக் கொண்டிருந்த கந்தசாமி இவனை ஒருமுறை பார்த்து விட்டு மீண்டும் எண்ண ஆரம்பித்தார். பணத்தைக் கட்டி டிராயரில் போட்டு விட்டு நிமிர்ந்தார்.

"தம்பி, என்ன வேணும்?"

"படித்தவங்க வேலைக்கு வேணும்னு வெளியே போர்டு..."

"ம். நீ என்ன படிச்சிருக்கே?"

"பி.காம். பர்ஸ்ட் கிளாஸ். டைப்ரைட்டிங் ஹையர் பாஸ் பண்ணியிருக்கேன் சார். சர்டிபிகேட்ஸ்..." என்று சங்கரன் பையை நீட்டினான்.

"இருக்கட்டும், இருக்கட்டும். முதல்ல உனக்கு இங்கே என்ன வேலைன்னு தெரிஞ்சுக்க."

"சொல்லுங்க சார்."

"வர்ற கஸ்டமருங்ககிட்ட 'என்ன வேணும் சார்'னு கேட்டு, சொல்றதை ஒரு சிட்டையில எழுதிக்கிட்டு, அந்தச் சிட்டைய ஒர்க்கர்ஸ்கிட்ட கொடுத்து அயிட்டங்களை பார்சல் பண்ணச் சொல்லணும். பார்சல் பண்ண பிற்பாடு, அயிட்டத்தையும், சிட்டையையும் ஒரு தடவை ஒத்துப் பார்த்துட்டு, ஒவ்வொண்ணுக்கும் ரேட்டைப் போட்டுக் கூட்டி, சிட்டையை எனக்கு அனுப்பணும். இதுதான் வேலை. சம்பளம் ஆரம்பத்துல ஐந்நூறு ரூவாதான் தருவேன். காலைல எட்டரையிலிருந்து ராத்திரி பத்து மணிக்குக் கடை சாத்தற வரைக்கும் இருக்கணும். மத்தியானம் ரெண்டு மணி நேரம் ரெஸ்ட். இன்னொரு விஷயம். வேலைக்கு வரும் போது வேஷ்டிதான் கட்டிக்கிட்டு வரணும். பேண்ட்டெல்லாம் போட்டுக்கிட்டு வரக் கூடாது."

சங்கரனின் மனத்திலிருந்த உற்சாகக் குமிழ் பொசுக்கென்று உடைந்து போய் விட்டது. பி.காம். படித்தது, உப்பு, புளி, மிளகாய் என்று மளிகை சாமான் லிஸ்ட் எழுதுவதற்காகவா. இப்படிப்பட்ட வேலைகள் தான் கிடைக்குமென்றால் எட்டாம் வகுப்புடன் நிறுத்தியிருக்கலாமே. அம்மாவின் கழுத்தில், காதில் கிடந்த நகைகளாவது மிச்சமாகியிருக்கும். படிப்புக்குத் தகுந்த வேலையே கிடைக்காதா? சே...!

"என்ன தம்பி! யோசிக்கறே?"

"இல்லீங்க. அம்மாகிட்ட ஒரு வார்த்தை சொல்லிட்டு வேலைல சேரலாம்னு நினைக்கறேன்."

"தாராளமா செய்யுப்பா. போயிட்டு வா."

மனமெங்கும் வெறுப்புடன் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு மெதுவாகத் தெருவில் நடந்தான். பையில் இருந்த சர்டிபிகேட்டுகள் கையில் கனத்தன. எல்லாவற்றையும் கிழித்து எறிய வேண்டும் போல் ஆத்திரமாக வந்தது. வீட்டு வாசலில் அம்மா தனக்காகக் காத்துக் கொண்டு நிற்பது தூரத்திலிருந்தே சங்கரனுக்குத் தெரிந்தது.

"சங்கரா, எங்கேப்பா

போனே? காலைல இருந்து நான் ரேஷன் கியூவுல நின்னு நின்னு இப்பத்தான் அரிசி வாங்கிட்டு வந்து சமைச் சேன். வா, வந்து கையைக் கழுவிட்டுச் சாப்பிடு.''

மௌனமாகச் சாப்பிட அமர்ந்தான் சங்கரன். சோற்றில் கை வைக்கவே கூச்சமாக இருந்தது. சங்கரனுக்குப் பத்து வயதிருக்கும் பொழுது அவன் தந்தை இறந்து விட்டார். அப்பொழுதிலிருந்து உழைக்க ஆரம்பித்தவள், தள்ளாத வயதிலும் இன்று வரை உழைத்து அவனை உட்கார வைத்துச் சாப்பாடு போடுகிறாள்.

''இன்னும் கொஞ்சம் சாதம் போட்டுக்கப்பா.''

''இல்லேம்மா. போதும்'' சங்கரனுக்கு இன்னும் பசிக்கத்தான் செய்தது. தான் இன்னும் கொஞ்சம் சாதம் வாங்கிக் கொண்டால், அம்மா பட்டினி கிடக்க வேண்டி வரும் என்று அவனுக்குத் தெரியும்.

கையைக் கழுவி விட்டு, தாயின் முந்தானையிலேயே துடைத்துக் கொண்டான் சங்கரன். அம்மாவின் புடைவை சாயம் வெளுத்துப் போய், ஆங்காங்கே கிழிந்து, கந்தலாய் இருந்தது. வேலை கிடைத்தவுடன், முதல் காரியமாக அம்மாவுக்குப் புடைவை வாங்க வேண்டும் என்றெண்ணிக் கொண்டான்.

லைப்ரரிக்குச் செல்லும் வழியில் எதிர்ப்பட்டான் முரளி. சங்கரனின் காலேஜ் மேட்.

''டேய், சங்கரா, உன்னை எங்கெல்லாம் தேடுறது?''

''ஏண்டா, என்ன விஷயம்?''

''அன் எம்ப்ளாய்மெண்ட் அலவன்ஸ் பணம் வந்திருக்குடா. பேங்க்ல போய் வாங்கிக்க.''

அப்பாடா... வந்து விட்டதா! இந்தப் பணம் வாங்குவதற்குப் பட்டபாடு. ஐந்து ரூபாய் பத்திரம் வாங்கி, அபிடவிட் டைப் பண்ணி, தாசில்தார் கையெழுத்து வாங்கி, எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்சில் பியூனிலிருந்து கிளார்க் வரை எல்லோரிடமும் ஏச்சும், பேச்சும் வாங்கி, அலையாய் அலைந்து, மனம் நொந்து போய்க் கொடுத்து விட்டு வந்திருந்தான் சங்கரன்.

வெளியே அடித்த வெயிலுக்கு பேங்கினுள் ஏ.சி. இதமாக இருந்தது. சங்கரன் தன்னிடமுள்ள டோக்கன் நம்பரைப் பார்த்தான். 42. கேஷ் கவுண்டரில் ''டோக்கன் நம்பர் 40'' கூப்பிட்டார்கள். 41 கூப்பிட்டார்கள். அடுத்து 43, 44, 45 என்று கூப்பிட்டுக் கொண்டே போனார்கள். சங்கரனின் டோக்கன் நம்பர் 42ஐ கூப்பிடவேயில்லை. சங்கரன் கேஷ் கவுண்டர் அருகில் சென்றான்.

''சார், டோக்கன் நம்பர் 42 வந்திருச்சா?''

''இன்னும் வரலை. வரும் போது கூப்பிடறேன். போ'' கேஷியர் சிடுசிடுத்தான்.

''இல்ல சார். எனக்குப் பின்னால வந்தவங்க எல்லாம் வாங்கிட்டுப் போயிட்டாங்க. என்னோடது மட்டும் ஏன் சார் வரலை?''

''போய்யா, போய் எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்சல கேளு. பணத்தை ஏய்யா பேங்குக்கு அனுப்பறே.



அங்கே வேட் பண்ணுறாங்க. பணத்தை நேரடியா எங்கிட்ட கொடுத்திருன்னு அங்கே போய்க் கேளு. வாங்குறது பிச்சைக் காசு. இதுல ஆயிரம் லொள்ளு.''

நடுத் தெருவில் அம்மணமாய் நிறுத்தி வைத்தது போல் அவமானத்தால் கூனிக் குறுகிப் போய் விட்டான் சங்கரன். வேலையில்லதாவர்களை உலகம் ஏன் இப்படி ஓட ஓட விரட்டுகிறது? சங்கரனுக்குக் கண்களில் நீர் தளும்பியது.

சேவிங்ஸ் அக்கவுண்ட் செக்ஷனுக்குப் போனான். ''சார், ப்ளீஸ் டோக்கனை வித்ட்ரா பண்ணிக்கங்க. நான் பணம் வாங்கலை.'' டோக்களைக் கொடுத்து விட்டு நகர்ந்தவனை, செக்ஷனில் இருந்தவன் அதிசயமாகப் பார்த்தான்.

பேங்க் வாசலை விட்டு கீழே இறங்கினான் சங்கரன். தோளில் ஒரு கை விழுந்தது. திரும்பிப் பார்த்தான். காலையில் சந்தித்த மளிகைக் கடை முதலாளி கந்தசாமி.

''தம்பி, கேஷ் கட்டறதுக்காக நானும் பேங்குக்குத்தான் வந்தேன். கேஷியர் பேசினது என் காதுலயும் தான் விழுந்துச்சு. பல தடவை நான் பேங்குக்கு வரும் போது உன்னை மாதிரி ஓர் இளைஞர் கூட்டம் அன்எம்ப்ளாய்மெண்ட் அலவன்ஸ் பணம் வாங்க வந்து நிப்பாங்க. எனக்கு அவங்களைப் பார்த்து, பரிதாபமாகவும் இருக்கும். கோபமாகவும் இருக்கும். 'பிச்சை புகினும் கற்கை நன்றே'ன்னுதான் சொல்லியிருக்காங்களே தவிர, யாரும் 'கற்ற பின்னாலும் பிச்சை எடு'ன்னு சொல்லலைப்பா. படிப்புங்கறது அறிவையும், புத்திசாலித்தனத்தையும் விரிவாக்கிக்கிறதுக்குத்தான். அதுவே வேலைக்கான குவாலிபிகேஷன் கிடையாது. பி.காம். படிச்சா, பேங்குல வேலை இடைக்கும். எம். ஏ. படிச்சா வாத்தியார் வேலை இடைக்கும்னு ஒவ்வொருத்தனும் மனக்கோட்டை கட்டிக் கிட்டே படிச்சு முடிச்சு வெளியே வர்றீங்க. 2000 பேர் தேவைப்படற TNPSC க்கு நாலு லட்சம் பேர் பரீட்சை எழுதி, முட்டி மோதறீங்க. பேங்க் எக்ஸாம், ரயில்வே எக்ஸாம்னு எல்லாத்தையும் எழுதிட்டு, என்ன பண்றது, வேலை கிடைக்கலைன்னு வீதியில அலையறீங்க. தம்பி, ஒண்ணு சொல்றேன் கேட்டுக்குங்க. நான் அந்தக் காலத்து எட்டாம் வகுப்புதான் படிச்சேன். மளிகைக் கடையில பொட்டலம் கட்டற வேலைக்குச் சேர்ந்து, அப்புறம் புளி வியாபாரியாகி, அரிசி வாங்கி வித்து, சின்னதா மளிகைக் கடை ஆரம்பிச்சு படிப்படியா உயர்ந்து, இன்னைக்கு இந்த ஊர்லேயே பெரிய ஜெனரல் ஸ்டோர்ஸ் முதலாளி. ஒயிட் காலர் ஜாப் தேடாதீங்க தம்பி. உழைச்சு முன்னுக்கு வரப் பாருங்க. படிப்புக்குத் தகுந்த வேலை தேடுறவன் முட்டாள். பார்க்கிற வேலையில படிச்ச படிப்பை உபயோகப் படுத்துறவன்தான் புத்திசாலி. நீ முட்டாளா, புத்திசாலியான்னு நீயே தீர்மானிச்சுக்க,'' குடையைப் பிடித்துக் கொண்டு தெருவில் நடந்தார் கந்தசாமி.

''சார்'' சங்கரன் அழைத்தான்.

திரும்பினார்.

''நாளையிலிருந்து வேலைக்கு வர்றேன் சார்.''

---

'இந்த சினிமா பூரா ஊட்டியில் எடுத்தோம். எக்கச்சக்கமான குளிர்ல மாட்டிக்கிட்டு யூனிட்ல எல்லோருக்கும் இருமல், ஜலதோஷம்!''

''படத்தின் கடைசியில் 'சுபம்'னு போடறதுக்குப் பதிலா 'கபம்'னு போட்டிருக்கிறதிலேருந்தே தெரியுதே!''

- ஆர். ரகோத்தமன்



''நீங்க அனுப்பிய க்ரைம் கதையைப் படிச்சேன்!''

''நான் குடும்பக் கதைதானே அனுப்பியிருந்தேன்!''

''இன்னொருத்தர் எழுதிய கதையைக் காப்பியடித்து எழுதுவதும் 'க்ரைம்'தானே!''

- ஞா. ஞானமுத்து

''கிழவி நோய் கஷ்டத்தைச் சொன்னதும் டாக்டர் ஏன் கட்டிப்பிடித்து ஆறுதல் சொல்றார்?''

''டாக்டர் அரசியல் வாதியாச்சே!''

- மணியன் தர்மலிங்கம்





# வாஷிங்டன் வைரம்

## 19

**ச**ட்டென்று ஒரு விளக்கைப் போட்டார் வைரமூர்த்தி. ஒளி பரவியதும் உருவம் தன் கண்களைப் பொத்திக் கொண்டது. சில நிமிடங்களில் கையை நீக்கியது. உருவத்தின் முகத்தைக் கவனித்த ரங்கதுரை பின்னால் நாலு அடிகள் நகர்ந்தார். வைரமூர்த்தியின் முகத்தைப் பார்த்தார். வைரமூர்த்தியின் முகத்தில் ஒரு குரூர உணர்ச்சி படர்ந்திருந்தது.

''பார்த்தாயிற்று, வைரம்..... எல்லாம் புரிஞ்சிடுச்சு போகலாமா?'' என்று ரங்கதுரை புறப்பட்டார்.

இருவரும் அமைதியாக வெளியேறினார்கள். வைரமூர்த்தி அறைக் கதவைப் பூட்டினார்.

வெளியறைக்கு வந்ததும் ரங்கதுரை சோபாவில் உட்கார்ந்தார். அவர் முகத்தில் பீதி நிலவியது.

''என்னடா ரங்கதுரை..... என்ன ஆச்சு உனக்கு?'' வைரமூர்த்தி குரூரமாய்ச் சிரித்தார்.

'முதலில் ஜகன்னாதன்... இங்கே... ஒரு ஆள் அறையில்.' ரங்கதுரைக்கு உண்மையிலேயே நடுங்க ஆரம்பித்தது.

**ம**றுநாள் எப்போதும் போல் பத்து மணியளவில் ஆபீசுக்கு வந்த வைரமூர்த்திக்கு போன் செய்திகள் காத்திருந்தன. ஒவ்வொன்றாய்ப் படித்தவர் சட்டென்று நிறுத்தினார்.

ரிச்சர்ட் மூர் போன் செய்திருந்தான். மடையன்! எத்தனை முறை சொல்லியாயிற்று... வேறு இடத்தில் தொடர்பு கொள்ள வேண்டுமென்று. அன்று நேராகவே வந்து விட்டான். இன்னைக்கி போன். இவனுக்கெல்லாம் டாலர் டாலராகப் பணம் கொட்ட வேண்டியிருக்கிறது!

ரிச்சர்ட் மூருக்கு வெளியே போய் போன் செய்யலாம் என்று தீர்மானித்துக் கொண்டார். நிர்மலாவுக்குக் கொடுக்க வேண்டிய அவசர வேலைகளைக் கொடுத்துவிட்டு, 'இன்னும் அரை மணியில் வருகிறேன்' என்று சொல்லிவிட்டு வெளியே போனார்.

அதற்குள் ரகுராமன் நிர்மலா இருக்கும் அறைக்கு வந்தான்.

''நல்ல நேரத்தில் வந்தீர்கள்..... ரிச்சர்ட் மூர் வைரமூர்த்திக்கு போன் செய்திருந்தான்.... அவனைக் கூப்பிடத்தான் அவர் வெளியே போயிருக்கிறார் என்று நினைக்கிறேன்.....''

''அடடா... நான் ரிச்சர்ட் மூர் பற்றி மறந்தே போய்விட்டேன்... ராபர்ட் வார்னரிடம் சொல்லவேயில்லையே'' என்று தன்னையே கடிந்து கொண்டான் ரகுராமன். 'இண்டர்போல்', ராபர்ட்டுக்குக் குறிப்புகள் கொடுத்துள்ளதாம். ஜகன்னாதனுக்கு குருமூர்த்தி, ரங்கதுரை என்று இரண்டு கூட்டாளிகள் என்பதை ராபர்ட் ஏற்கனவே தெரிந்து கொண்டுள்ளான்.''

''அப்படின்னா இந்த வைரமூர்த்தி யார்? குருமூர்த்தி எங்கே?''

''அதுதான் ராபர்ட்டுக்கும் எனக்கும் குழப்பமாய் இருக்கிறது!'' ரகுராமன் ஒப்புக் கொண்டான்.

''நான் வேலையை முடிக்க வேண்டும்... சாயங்காலம் பேசலாமா, ரகு?'' என்று நிர்மலா கேட்டாள்.

''உன் அபார்ட்மெண்ட்டுக்கு வரட்டுமா?'' என்றான்.

''நிச்சயம். அதிருக்கட்டும்... நல்ல தம்பி எப்படி இருக்கிறார்? எத்தனை மணிக்குத் திரும்பினார்?''

''ரங்கதுரையா! அவர் இரவு பத்து மணிக்கு மேல்தான் வந்தார். ஏனோ பேயறைந்த மாதிரி இருந்தார், வைரமூர்த்தி என்ன சொல்லிப் பயமுறுத்தி இருக்கானோ'' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டான் ரகுராமன்.

**வாசன்**

ரிச்சர்ட் மூருடன் தொடர்பு கொள்ள எண்களைச் சுழற்றினார் வைரமூர்த்தி.

''நான் நேற்று மாலை சுமார் ஐந்து மணிக்கு மாஸசூஸெட்ஸ் அவென்யூவில் போய்க் கொண்டிருந்தேன். ஏதேச்சையாக இந்தியத் தூதரகத்தைப் பார்த்தேன். அங்கு வாசலில் நின்று பேசிக் கொண்டிருந்தது யார் தெரியுமா?''

''அதைத் தெரிஞ்சுக்கத்தானே உனக்கு நூறு நூறாய் டாலர்களைக் கொட்டறேன்!''

''நிர்மலாதான்!''

வைரமூர்த்தி யோசனை செய்தார். ''ஹலோ... ஹலோ....'' என்று ரிச்சர்ட் கத்துவது கேட்டது. மீண்டும் பேசினார்!

''ரிச்சர்ட், கவனமாய்க் கேள். நிர்மலாவின் நடவடிக்கைகளை எப்பவும் கண்காணிக்க ஏற்பாடு செய். நீ போகாதே... அவள் உன்னைப் பார்த்து விட்டாள். வேறு ஆள் போடு!''

''வாரம் இருநூறு டாலர் கூடுதல் செலவாகுமே!''

''கொடுத்து அழறேன். எனக்குத் தினமும் உன் ரிப்போர்ட் வரணும்.'' போனை வைத்தார், வைரமூர்த்தி.

'நிர்மலா யார்?' என்ற கேள்வி அவரைத் துளைத்தது.

## 20

நிர்மலா இந்திய தூதரகத்திலிருந்து சீக்கிரமே புறப்பட்டாள். ரகுராமன் அவளுடைய வீட்டிற்கு வருவதாய்ச் சொல்லியிருக்கிறான். அவனுக்குச் சிற்றுண்டி செய்து வைக்கலாம் என்று நினைத்தாள். வழியில் கடையில் குடைமிளகாயும், வெங்காயமும் வாங்கினால் சூடான பஜ்ஜியை ரகுராமன் வரும்போது தரலாமே என்று ஆசைப்பட்டாள்.

தன்னுடைய எதிர்காலத்தையும் ஒர ளவு பணயம் வைத்து வைரமூர்த்தியைத் தக்க ஆதாரத்துடன் பிடிக்க வேண்டும் என்று விரும்பும் ரகுராமனின் உயர்ந்த குணம் அவளை மிகவும் கவர்ந்தது. கடந்த இரண்டு நாட்களில் ரகுராமன் நிர்மலாவின் மரியாதைப் படிகளில் பல மடங்கு ஏறி விட்டான். அவனைப் பற்றி நினைக்கும் போது அவளுக்கு ஒன்று தோன்றும் : அவன் தலையைத் தன் மடியில் வைத்து அவன் முடியைக் கோதி விட வேண்டும் என்று ஆசைப்பட்டாள். மன்மதனின் விசித்திர விளையாட்டுக்கு நிர்மலா இலக்கானாள்!



''என்னது. குழந்தைக்குப் பெயர் வைக்கச் சொன்னால் 'நெடுநீநெறி வென்ற அருந்தவப் புலத்து விஜய ரகுநாத அருண் மொழி வர்மன்'னு இவ்வளவு நீளமா வைக்கிறாரே தலைவர்?''

''பெயர் வைக்க எழுத்துக்குப் பத்து ரூபாய் வாங்குறவராச்சே. அதான்.''

- ஆலத்தம்பாடி ராஜகோபால்



சாதாரணமாக நடந்து தூதரகத்துக்கு அருகிலிருந்த மெட்ரோ நிலையத்தை அடைந்தாள். அவள் பின்னால் திரும்பிப் பார்த்திருந்தால் தொலைவில் ரிச்சர்ட் மூரும் அவனுடன் ஒரு கறுப்பு அமெரிக்கனும் நின்றிருப்பதை அவள் தெரிந்து கொண்டிருப்பாளோ என்னவோ! ரிச்சர்ட் அந்த ஆளிடம் ஏதோ விவரமாய்ச் சொன்னான். பிறகு காரில் ஏறிப் புறப்பட்டான்.

அந்த கறுப்பு ஆள் நிர்மலா எஸ்கலேட்டரில் இறங்கியதும் அவள் போகும் திசையில் பின் தொடர்ந்தான். அவனுடைய நிழல் அவள்! எங்கு போனாலும் கூடவே போக வேண்டும். குறிப்புகளை ரிச்சர்ட்டுக்கு அடிக்கடி போன் செய்ய வேண்டும்.

ஒரு வழியாக வேலை நாட்கள் ஐந்து ஓடின. வைரமூர்த்தியை ரகுராமன் - நிர்மலா ஜோடி கவனிக்க நிர்மலாவை ஆள் மூலம் வைரமூர்த்தி கண்காணிக்க, அவர்கள் ஒரு பயங்கர விளையாட்டில் இறங்கி இருந்தனர்.

சனிக்கிழமை காலை. சில நாட்களாகவே நல்லதம்பியின் உற்சாகம் குறைந்திருப்பதை வைத்தியநாதன், பூர்ணம் இருவரும் கவனிக்கத் தவறவில்லை. அவர் பேசுவது குறைந்திருந்தது. டீ.வி. பார்ப்பது குறைந்திருந்தது. ஏதோ நடக்கக் கூடாதது நடக்கப் போவது போல உட்கார்ந்திருந்தார். கடைசியில் இனி தாமதிக்க முடியாது என்பது போல, 'தனியாகக் கொஞ்சம் காலார நடக்கலாம், வர்றீங்களா மிஸ்டர் வைத்தி' என்று அழைத்துப்போய்த் திட்டப்படி பேச்சைத் தொடங்கிவிட்டார்.

''மிஸ்டர் வைத்தி.... நான் சொல்லப் போறது ஒரு முக்கிய விஷயம்.... கவனமாய்க் கேக்கணும்''

''என்னன்னு சொல்லுங்க நல்லதம்பி'' என்றார்.

வைரமூர்த்தியின் திட்டத்தை விளக்கமாகச் சொன்னார்.

வைத்தியநாதன் பதில் பேசவில்லை.

''மௌனம் சம்மதத்துக்கு அறிகுறின்னுவாங்க... இல்லையா மிஸ்டர் வைத்தி''.

''வீட்டுக்குத் திரும்பலாம் வாங்க நல்லதம்பி'' என்று மிகச் சாதாரணமாய் வைத்தியநாதன் சொன்னதை நல்லதம்பி ரசிக்கவில்லை.

''இங்க பாருங்க மிஸ்டர் வைத்தி.... எனக்குத் திங்கட்கிழமைக்குள்ளே பதில் வரணும்... தெரியுதா?'' என்று கடுமையாகச் சொன்ன நல்லதம்பியை ஒருமுறை பார்த்தார் வைத்தி. பிறகு அபார்ட்மெண்ட்டை நோக்கி நடந்தார்.

அவர்கள் இருவரும் திரும்பியதும் ரகுராமன் அவசரப்படுத்தினான்.

''என்ன இது.... இன்னக்கி நாம பிக்னிக் போக வேண்டாமா? புறப்படலையா?'' என்றான்.

நல்லதம்பி வைத்தியநாதனுடன் எதற்காகத் தனியாய்ப் போய் வர வேண்டும்? வைத்தியநாதனின் முகத்தில் எந்தவிதமான சலனமும் இல்லை. 'மாமா ரொம்ப கிண்டு' என்று ரகுராமன் நினைத்தான்.

'பிக்னிக்', ரகுராமன் நினைத்ததை விடவே சிறப்பாக இருந்தது. நிர்மலா ருசியான பண்டங்கள் இரண்டைச் செய்து வந்திருந்தாள். 'டைடல் பேசின்' பக்கத்தில் மரநிழலில் விரிப்பைப் போட்டு நிதானமாய்ச் சாப்பிட்டார்கள். அவரவருக்குப் பிடித்தமான பேச்சுக்கும் குறைவில்லை. நல்லதம்பிகூட கொஞ்சம் பழையபடி பேச ஆரம்பித்தது வைத்தியநாதனுக்கு வியப்பைத் தந்தது.

இரண்டு மணி அளவில் பூர்ணம், வைத்தியநாதன் நல்லதம்பி மூவரும் வாஷிங்டன் மான்யூமெண்ட்டின் மேலே போக கீழே வரிசையில் நின்றார்கள். நினைவுச்சின்னத்தைச் சுற்றி 50 அமெரிக்கக் கொடிகள் அழகாக அசைந்தன.

'அடடா... அன்னிக்கி இதைக் கூரான பென்சில்போல இருக்குன்னு சாவி எழுதியிருந்தது எவ்வளவு உண்மை' என்று வைத்தியநாதன் நினைத்தார்.

உயரமான நினைவுச்சின்னம், அமெ

ரிக்க மக்கள் வாஷிங்டனுக்குத் தங்கள் மனத்தில் அளித்த உயரமான இடத்தை உலகுக்குப் பறைசாற்றியது. அது 555 அடி 5⅛ அங்குல உயரமுள்ளது. நான்கு பக்கங்களுடைய தூண் உயரே போகப் போகச் சிறிதாகி உச்சியில் 'பிரமிட்' போன்று முடிகிறது. இதை 'ஆப்லிஸ்க் (OBELISK) என்று சொல்கிறார்கள்.

'எலிவேட்டர்' எடுத்து மேலே போனால் கண்ணாடி சன்னல்கள் மூலம் நாலாபக்கமும் பார்க்கலாம். வாஷிங்டன், டி.சி. எவ்வளவு அழகான நகரம் என்பதை இங்கிருந்து காணலாம். வடக்கே ஜனாதிபதியின் வெள்ளை மாளிகையின் பின்புறம் தெரியும். மேற்கே லிங்கன் நினைவுச் சின்னம் - அதன் அருகில் இருக்கும் வியட்நாம் போர் நினைவுச் சின்னம். கிழக்கே 'ஸ்மித்ஸோனியன்' கோட்டையும், மியூசியங்களும். சிறிது தள்ளி, 'கேபிடல் டோம்' எல்லாம் பார்க்கலாம். தெற்கே தாமஸ் ஜெஃப்பார்ஸன் நினைவு மண்டபம், 'டைடல் பேஸின்', அதற்கும் அப்பால் நேஷனல் ஏர்போர்ட்!

இதையெல்லாம் பார்த்துவிட்டு மூவரும் கீழே திரும்பி வர ஒரு மணி நேரத்துக்கும் மேலாயிற்று.

**நி**னைவுச்சின்னத்துக்குப் போகும் வரிசையில் மூவரையும் விட்டு விட்டுத் திரும்பிய ரகுராமனும் நிர்மலாவும் 'பிக்னிக்' சாப்பிட்ட இடத்துக்கே திரும்பினார்கள்.

''கொஞ்ச நேரம் பேசுவதற்கு நல்ல சந்தர்ப்பம்'' என்று உட்கார்ந்தான் ரகுராமன்.

அவர்களைப் போல் ஜோடிகள் நிறைய பேர் அங்கு இருந்தனர். ரகுராமனும் நிர்மலாவும் ஜோடிகளைப் பார்த்தனர். நிர்மலா தலையைச் சற்று குனிந்து கொண்டாள்.

அழகான நீல வானம். மேகங்களே இல்லாமல் 'பிக்சர் பெர்ப்பக்ட்' என்பார்களே அதுபோல இருந்தது. தூரத்தே ஜெஃப்பர்ஸன் நினைவு மண்டபம். அதைச் சிறிதளவு மறைத்த சில மரங்கள். 'டைடல் பேசினில்' சிறு 'பெடல்' செய்யும் படகுகள் ஜோடிகளையும், சிறுவர், இளைஞரையும் உல்லாசமாக நீரில் மிதக்க விட்டன. ரகுராமன்-நிர்மலா உட்கார்ந்திருந்த இடத்துக்குப் பக்கத்தில் வண்ண வண்ணப் பூக்கள் வசந்தத்தின் காதல் பாட்டைப் பாடிக் கொண்டிருந்தன.

அந்தக் காதலின் கணைக்குட்பட்ட இருவரும் பேச்சை எப்படித் தொடங்குவது என்று தயங்கினார்கள். பேசாத நேரத்தில் ஏராளமான பேச்சை அவர்களுடைய கண்கள் பேசின. துடிக்காத உதடுகளின் துடிப்பை இதயம் கொட்டியது.

''நிர்மலா....''

''ம்.....''

''நான் நினைப்பது உண்மைதானா நிர்மலா?''

''நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பது எனக்கு எப்படித் தெரியும்?''

''நாம் நினைப்பது ஒன்றேயானால் தெரிஞ்சிருக்கணுமே.''

நிர்மலா தலையை மீண்டும் குனிந்து கொண்டாள். ரகுராமன் அவள் முகத்தைத் தன் பக்கம் திருப்பினான்.... அவன் தொட்ட இடம் சுட்டது. அவனையே பார்த்தாள்.

நிர்மலாவால் சும்மா இருக்க முடியவில்லை. அவன் தலையை அவள் மடியில் சாய்த்துக் கொண்டு அவன் முடியைக் கையினால் கோதினாள்.

''நான் உங்கள் மேல் உயிரையே வைத்திருக்கிறேன், ரகு'' என்றாள்.

ஒரு மணி நேரம் போனதுகூட தெரியாமல் ஓடிவிட்டது! வாஷிங்டன் மான்யுமெண்டைப் பார்த்துவிட்டு மூவரும் திரும்பி விட்டார்கள்.

டைடல் பேசினில் உல்லாசப் படகில் பவனி வந்த பிறகு லிங்கன் நினைவு மண்டபத்தையும் வியட்நாம் போர் நினைவுச் சின்னத்தையும் சுற்றிப் பார்த்தார்கள்.

கால்கள் கெஞ்சின.

''**நா**ங்கள் டாக்சியில் மெட்ரோ நிலையத்துக்குப் போகிறோம். நீயும் வருகிறாயா நிர்மலா?'' என்றான் ரகுராமன்.

''நான் இன்று டாக்சியிலேயே வீட்டுக்குப் போகலாம் என்று இருக்கிறேன்.... ஒண்ணு செய்வோம்... உங்கள் எல்லோரையும் மெட்ரோவில் விட்டுவிட்டு நான் போகிறேன்'' என்றாள்.

ரகுராமன் டாக்சி ஒன்றை நிறுத்த அவர்கள் ஏறினார்கள். டாக்சி கான்ஸ்டிடியூஷன் அவென்யூவில் கிழக்கே போயிற்று.

நிர்மலாவின் நிழலான ஆள் இன்னொரு டாக்சியை நிறுத்தி ஏறினான்.

(தொடரும்)



ராமபத்திரன் வீட்டுக்குள்ளிருந்தபடி மழையை ரசித்துக் கொண்டிருந்த போது, புத்தம் புதிய மாருதி கார் ஒன்று வாசலில் வந்து நின்றது.

'ஆஹா, நம்மைத் தேடித்தான் வருகிறார்கள் போலிருக்கிறது!' என்று மகிழ்ந்து போனவர், மனைவியைத் தேடினார்.

'ஏதாவது கல்யாணக் கச்சேரிக்கு 'புக்' பண்ண வருகிறார்களோ?....'

பரிமளா சமையலறையிலிருந்து வெளிவரும் வரை காத்திருக்க முடியவில்லை. சமையலறையின் வாசலுக்கே ஓடினார்.

''பரிமளா, யாரோ மாருதியில் வருகிறார்கள். என்னவென்று விசாரி!'' என்றார்.

''வீடு மாறிப் போய் வந்திருப்பார்கள்!'' என்று பரிமளா சொன்னதில் தொனித்த கேலியையோ, இண்டலையோ அவர் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. (எடுத்துக் கொள்ள முடியாது: அப்புறம் அவள் கையில் எதையாவது எடுத்துக் கொண்டு விடுவாள்.)

வந்தவர்கள் இரண்டு பேரும் இளைஞர்கள்தாம். அதிலும் ஒருத்தனுக்கு மூஞ்சியில் மீசையைத் தவிர வேறு எதுவுமே இல்லையோ என்று தோன்றியது. வைக்கோல் போரில் துழாவுகிற மாதிரி துழாவித்தான் கண்ணையோ மூக்கையோ கண்டுபிடிக்க வேண்டும் போல் இருந்தது.

இன்னோர் இளைஞன் அதற்கு நேரெதிர். கட வாத்தியம் மாதிரி வழுவழுவென்று தலை. தீர்க்கமான நாசி.

''யார் நீங்கள்?'' என்று பரிமளா கேட்ட போது அவளை அவர்கள் லட்சியம் செய்த மாதிரியே தெரியவில்லை.

''ராமபத்திரன் எங்கே?'' என்றான் மீசை. சத்தம் வந்த பிறகுதான், அவனுக்கு வாய் என்ற ஓர் அங்கமே அங்கே இருந்ததை உணர்ந்தார் ராமபத்திரன், உள்ளே இருந்தபடி.

''வி வாண்ட் ராமபத்திரன்!'' என்றான் மூக்கு. 'மூக்கால் பேசினாலும் தமிழில் பேசித் தொலைக்கலாகாதோ? இங்கிலீஷ் என்ன வேண்டியிருக்கிறது, இங்கிலீஷ்!'

''கல்யாணக் கச்சேரியா? சபா கச்சேரியா?'' என்று கேட்டுக்கொண்டே வந்தார் ராமபத்திரன்.

''கல்யாணக் கச்சேரி!'' என்றான் மீசை. ''என் தங்கைக்குக் கல்யாணம். வாருங்கள். எங்களுடன் காரில் வந்தால் பேசி முடித்து விடலாம்!'' என்றான்.

ஜரிகைக் கரை வேட்டியுடன், சில்க் ஜிப்பாவுடன், படு ஸ்டைலாக ராமபத்திரன் நடந்து போய் காரில் ஏறுவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள் பரிமளா.

''சீக்கிரம் வந்து விடுங்கள். சிஷ்யர்கள் வருவார்களே?'' என்றாள் உரத்த குரலில்.

வெள்ளை மாருதி கார் விருட்டென்று ஓடி, பறந்து, மறைந்தது.

''உம், கண்ணை மூடிக் கொள்ளுங்கள்!'' என்று உரக்கக் கத்தினான் மீசை.

''நான் ராகம் பாடற போது மட்டும்தான் கண்ணை மூடிக்கொள்ளுவேன். ஹி...ஹி....'' என்ற ராமபத்திரனை, மூக்கு முறைத்துப் பார்த்தது.

''க்ளோஸ் யுவர் அய்ஸ்!'' என்றான் மூக்கு.

# ஒரு பாடகர் கடத்தப்படுகிறார்

கண்ணைக் 'க்ளோஸ்' பண்ணவில்லை என்றால் ஆளையே க்ளோஸ் பண்ணி விடுவான் போலிருந்தது.

டபக்கென்று கண்கள் இரண்டையும் மூடிக்கொண்டார் ராமபத்திரன். 'யார் இவர்கள்? பஞ்சாப் தீவிர வாதிகளா? உல்ஃபாவா? விடுதலைப் புலிகளா? நக்ஸலைட்டுகளா? ஹே ராமா, என்னைப் பத்திரமாக வீட்டில் சேர்த்துவிடு....'

**பா**ழடைந்த வீடு ஒன்றின் முன்னால் கார் நிற்க, ''கெட் டவுன்!'' என்று இரைந்தான் மூக்கு.

''கண்ணைத் திறந்து கொண்டா, திறக்காமலேயா?'' என்று பயந்து, பயந்து சந்தேகத்துடனே கேட்டார் ராமபத்திரன்.

பளிச்சென்று டவல் சைஸில் ஒரு கர்ச்சிபை உருவினான் மீசை. அவர் கண்களை மூடி, இறுக்கி ஒரு கட்டுக் கட்டினான்.

''நான்தான் கண்ணையே திறக்கலையே, எதற்குக் கட்டுப் போடுகிறீர்கள்?'' என்று அவர் கேட்டதை இருவரும் லட்சியமே செய்யவில்லை.

உள்ளே கடைசி அறைக்கு முந்தைய அறையில் அவரைக் கொண்டு வந்து, கர்ச்சிப் கட்டை அவிழ்த்தான் மீசை.

''கல்யாணம், கச்சேரி என்றெல்லாம் சொல்லி விட்டு....?''

''கடத்தல் கச்சேரி!'' என்று சொல்லிவிட்டுக் கடகடவென்று சிரித்தான் மீசை. வாய் மட்டுமல்ல, அதற்குள் சில பல பற்களும் அவனுக்கு இருந்தன என்று கண்டு கொண்டார் ராமபத்திரன்.

''கடத்தலா! என்னைக் கடத்திக் கொண்டு போய் என்ன கிடைக்கும் உங்களுக்கு?'' அழாத குறையாகக் கேட்டார் ராமபத்திரன்.

''என்னென்னவோ கிடைக்கும்!'' என்றான் மீசை.

''யு டோன்ட் நோ!'' என்றான் மூக்கு.

சரிந்து போய் உட்கார்ந்தார் ராமபத்திரன். தேனுகா ராகத்தில், ''தெலியலேது ராமா....'' என்று விஸ்தாரமாகப் பாட ஆரம்பித்தார். ஏதோ சங்கீத கலாநிதி விருது கிடைத்து, சதஸில் பாடுகிற மாதிரி.....

''ஷட் அப்!'' என்றான் மூக்கு.

''நான் ஒரு பாவமும் அறியாதவன்பா. என்னை விட்டுடு... நான் துரைசாமி மாதிரி ஐ ஓ சி எக்ஸிகியுடிவ் டைரக்டர் கூட இல்லை. உனக்கு ஒரு பைசா பிரயோசனம் இருக்காதப்பா. என்னை மறுபடி வீட்டிலேயே கொண்டு விட்டுடு... மறுபடி கண்ணை வேணுமானால் மூடிக்கொள்கிறேன்!''

**அ**ன்று மாலை தினசரிகளில் எல்லாம் செங்கல் சைஸ் எழுத்துக்களில், 'பிரபல கர்நாடக இசைப் பாடகர் ராமபத்திரன் கடத்தப்பட்டார்' என்று முதல் பக்கத்திலேயே செய்தி வெளியாகியது.

பரிமளாவைப் பல கோணங்களில் படம் எடுத்தார்கள். கோணல் மாணலாகப் படம் எடுத்தார்கள்: தலைவிரித்துப் போட்டுக் கொண்டு, வாயைப் பொத்திக் கொண்டு, ஓவென்று அழுதுகொண்டு.... தனியே ராமபத்திரன் படம். பிரபல பாடகர். புகழ்பெற்ற பாடகர்.... ஏதோ ஒரு திரைப் படத்தில், கோஷ்டியாகப் பலர் ஹம்மிங் செய்த போது, கூடவே 'உம்' மென்று சத்தம் கொடுத்ததைப் பரிமளா நினைவு கூர்ந்தவுடன் 'சினிமா பின்னணிப் பாடகர்' என்று ஆளாளுக்கு அடைமொழிகள் வடை, தோசை மொழிகள் சேர்த்து எழுதினார்கள்.

பாடகரின் மனைவி பரிமளத்தம்மாள், கடத்தல்காரர்களுக்கு உருக்கமாக வேண்டுகோள் விடுத்திருக்கிறார் என்று ஒரு செய்தியையும் வெளியிட்டார்கள்.

குடியரசுத் தலைவருக்குத் தந்தி.

பிரதமருக்குத் தந்தி.

கடத்தல்காரர்களுடன் பேச்சு வார்த்தைகளைச் சாமர்த்தியமாகப் பேசும் அமைச்சருக்குத் தந்தி.

முதலமைச்சருக்குத் தந்தி.

முதல் நாள் இத்தனை களேபரம் நடந்து, இரண்டாம் நாள், மூன்றாம் நாளில் ராமபத்திரன் வீட்டில் ஜே ஜே என்று தினசரி கூட்டம் கூடத் தொடங்கி விட்டது. வாசலில் சிறியதாக 'சங்கீத வித்துவான் பி. ராமபத்திரன்' என்றிருந்த செங்கல் 'சைஸ்' போர்டு விசுவரூபம் எடுத்துப் பாதி சுவரை அடைத்துக் கொண்டிருந்தது.

**மு**தலமைச்சரின் ஒப்புதல் பெற்று, குட்டி அமைச்சர் ஒருவர் ராமபத்திரன் மனைவி பரிமளத்தை வந்து சந்தித்து ஆறுதல் சொல்லி விட்டுச் சென்றார். பெரியார் வழியில் நடந்து, அண்ணா



வழியில் தடம் பதித்து, புரட்சித் தலைவர் வழியில் பாதம் வைத்து, முதல்வர் எ ப் ப டி யு ம் கடத்தல்காரர் களைக் கண்டுபிடித்து விடு வார் என்று உறுதி கூறினார்.

நிறையப் பேர் பாட்டு டியூஷன் படிக்க வேண்டும் என்றும், பாடகர் என் றைக்கு வந்து சேருவார் என்றும் கேட்டு விட்டுப் போனார்கள்.

மதுரை, திருச்சி, திரு நெல்வேலி, சேலம், கோய முத்தூர், பசும்பொன் முத்து ராமலிங்கம், செங்கை-எம்.ஜி.ஆர், நாகப்பட்டி னம்- காயிதே மில்லத், திரு வண்ணாமலை சம்புவ ராயர், வ. ஆற்காடு அம்பேத் கார், திண்டுக்கல் அண்ணா ஆகிய மாவட்டங்களிலிருந் தும், இனி இரண்டாக, மூன் றாகப் பி ரி ய வி ரு க் கி ற மாவட்டங்களிலிருந்தும் கண்டனக் கூட்டங்கள் நடத் தப்பட்டு, தி ன ச ரி க ளி ல் பத்தி பத்தியாக, ராமபத்திர னின் பு கை ப் ப ட த் து ட ன் செய்திகள் வெளியாயின.

'தேன் குரல் மன்னன்' ராமபத்திரன் ரசிகர் மன்றங் கள் ஆங்காங்கே தோன்றி, பாடகர் ராமபத்திரனின் உட லுக்கும் குரலுக்கும் எந்த வித ஊறும் கடத்தல்காரர் கள் செய்து விடாமல் இருக்க, கோயில்கள், சர்ச் சுகள், மசூதிகளில் விசேஷ பிரார்த்தனைகள் நடந்தன.

வார இதழ்கள் பரிமளத் திடம் பேட்டி கண்டு படத் துடன் வெளியிட்டன. 'கடத் தப்பட்ட பாடகர் மனைவி பரிமளத்தின் பரபரப்பான பேட்டி' என அதற்கு விளம் பரமும் செய்தன.

கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவவிட வி ரு ம் ப ா த வாழப்பாடி கோஷ்டியினர், திருவையாறு தியாகராஜர் ஆராதனை விழா நடத்தும் மூப்பனார், பாடகர் கடத்த லுக்குத் தார்மீகப் பொறுப் பேற்று அமைச்சர் பதவியி லிருந்து விலக வேண்டும் என்று அவசர அறிக்கை வெளியிட்டனர். மூப்பனார்



அமைச்சர் அல்லவே, எப் படி ராஜிநாமா செய்வார் என்ற எக்குத் தப்பான பிரச்னை எழுந்தது. முதலில் அவரைப் பிரதமர், அமைச்ச ராக உடனடியாக நியமனம் செய்ய வேண்டும் என்றும், பிறகு மாலையில் அவரை ராஜிநாமா செய்யச் சொல்லு வது அவ்வளவு பெரிய கஷ் டமா என்ன? என்றும் வாழப்பாடி கோஷ்டியினர் நாளிதழ் அறிக்கை வெளி யிட்டனர். தே வை ப் ப ட் டால், மூ ப் ப னா ரு க் கு அமைச்சர் பதவி கொடுக்க வேண்டும் என்று, புரட்சித் தலைவி அனுமதி பெற்றுப் போராட்டம் ந ட த் த வு ம் தயாராக இருப்பதாக அறி வித்தனர்.

போராட்டத்தில் த மி ழ் நாட்டுச் சங்கீத வித்துவான் களின் சங்க அங்கத்தினர்கள் திரளாகக் கலந்து கொண்டு த ங் க ள் அதிருப்தியைக் காட்ட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டனர்.

ஏற்கனவே பல கோஷ்டி களாகப் பிரிந்து செயல் படும் சங்கீதக் கலைஞர்கள், ஆர்ப்பாட்டம் தேவை என் றும், தேவை இல்லை என் றும், அணி பிரிந்து நின் றனர்....

"ஏறும் காரில்!" என்று மீசையும் மூக்கும் கூறிய போது, "கண்ணை மூடிக் கொள்ளணுமா, வேண் டாமா?" என்று பயந்தபடி கேட்டார் ராமபத்திரன்.

"உம் இஷ்டம்!" என் றான் மூக்கு.

அடேயப்பா! எத்தனை தூரம்! ஊருக்கு வெளியே, இத்தனை த ன் னி ய ா கொண்டு வந்திருக்கான் கள்?

ராமபத்திரன் வீ ட் டை அடைந்ததும், க த வை த் தட்ட வேண்டிய அவசியமே இருக்கவில்லை. மனைவி பரிமளம் ஆரத்தியோடு காத் திருந்தாள்.

"என்ன இது! நான் இன் றைக்கு வருவேன் என்று எப்படித் தெரியும் உனக்கு? ரெடியாகக் காத்திருந்த மாதிரி அல்லவா இருக் கிறது?" என்றார் ராம பத்திரன்.

"தினம் தினம், நீங்கள் திரும்பி வருவீர்கள் என்று காத்துக் கொண்டுதானே இருக்கிறேன்!" என்றாள் பரி மளம்.

"என்னை எப்படி நடத்தி னார்கள் என்று கேட்கவில் லையே நீ?"

"எனக்கு அதெல்லாம் அவசியமே இ ல் லை. போனது போலவே நீங்கள் திரும்ப வந்துவிட்டீர்கள். ஆனால் போகிற போது உங்கள் பெயர் இந்தத் தெரு வுக்கு மட்டும்தான் தெரி யும். இப்போது நாடே அறிந்த புகழ் பெற்ற பாடகர் நீங்கள். ஏதோ ரெண்டு சிங்குகளை விடுதலை செய் தால் உங்களை ஒன்றும் பண் ணாமல் விடுவோம் என்று அந்த ரெண்டு பையன்களும் சொன்னதாகப் பத்திரிகை, ரேடியோ, டீவி எல்லாவற் றிலும் சொன்ன பிறகு, உங்கள் பெயர் எத்தனை பேருக்குத் தெரிந்துவிட்டது என்கிறீர்கள்! கச்சேரிக்குத் தேதி வாங்க எத்தனை சபாக்கள் எழுதியிருக்கின் றன தெரியுமோ? காஸெட் கொடுக்கணுமாம் நீங்கள். பத்து கம்பெனிகள் அதற்கு வேறு டேட் கேட்டிருக்கி றார்கள்....."

ராமபத்திரனின் செவி களில் இவை புகுந்து, அவர் தலைக்குள் ஏறி, மூளையி லுள்ள செல்களை உலுக்கிக் கொண்டிருந்த போது -

"ரொம்ப தாங்க்ஸ்டா சப்புணி. ரொம்ப ரொம்ப தாங்க்ஸ்டா வெங்கிட்டு!" என்று பரிமளம் மீசையை யும், மூக்கையும் வாழ்த்திக் கொண்டிருந்தது கே ட் க வில்லை.

RAMU AND NITIN ARE BROWSING AT A BOOKSHOP —

Mummy gave us five rupees to spend.

This is a nice story-book.....

....but it costs Rs. 15!

All these books are costly. We won't get anything for five rupees.

Why not? Here is a book for three rupees!

Three rupees?

GOKULAM?

Hey! Look! STORIES!

Yes. It is a monthly magazine for children.

PUZZLES! POETRY! What fun!

It even has a competition!

I'll buy it!

Please keep a copy for us every month!

GOKULAM, GUINDY, MADRAS - 600 032.

# சிவகாமியின் சபதம்

## இருபத்தோராம் அத்தியாயம்
## கோபாக்னி

ஆயனரும், சிவகாமியும் வாதாபி வீரர்களைச் சந்திக்க நேர்ந்தது எப்படி என்பதைத் தெரிந்து கொள்வதற்கு நாம் சிறிது பின்னோக்கிச் செல்ல வேண்டும்.

காஞ்சி நகரின் வடக்குக் கோட்டை வாசலில் மகேந்திர பல்லவரிடம் விடை பெற்றுக் கொண்டு பிரிந்த போது புலிகேசியின் மனநிலை எப்படியிருந்தது என்பதை ஒருவாறு நாம் தெரிந்து கொண்டோம். கரும் புகையும், தீக் குழம்பும், அக்கினிச் சுவாலையும் குமுறிக் கொண்டு எப்போது வெளிக் கிளம்பலாம் என்று வழி பார்த்துக் கொண்டிருக்கும் நெருப்பு மலையின் கர்ப்பத்தைப் போல் இருந்தது அவருடைய உள்ளம்.

காஞ்சிமா நகரின் மணிமாட மண்டபங்களும், அந்நகர மக்களின் செல்வமும், சிறப்பும், காஞ்சி அரண்மனையின் மகத்தான ஐசுவரியமும், அங்கு அவர் கண்ட காட்சிகளும், வைபவங்களும் அளவற்ற பொறாமைத் தீயை அவர் உள்ளத்தில் மூட்டியிருந்தன.

அந்தப் பொறாமைத் தீயை வளர்க்கும் காற்றாக அமைந்தது கடைசியாக நடந்த சிவகாமியின் நடனம். நடனத்தின் போது மகேந்திர பல்லவர் கலைச் செருக்குடன் கூறிய மொழிகள் கலை உணர்வு இல்லாத புலிகேசியின் உள்ளத்தில் பெருந் துவேஷத்தை உண்டாக்கின.

எல்லாவற்றுக்கும் மேலாக, புலிகேசியின் மனத்தில் கோபம் குமுறி எழும்படி செய்த விஷயம், மகேந்திர பல்லவர் தம்மை நெடுகிலும் ஏமாற்றி வந்திருக்கிறார் என்ற உணர்ச்சியேயாகும். வட பெண்ணைக் கரையில் தம் முன்னிலையில் அவர் தன்னந்தனியாக வந்து நின்று, பொய் ஓலையைக் கொடுத்து ஏமாற்றி விட்டல்லவா போய் விட்டார்? அதற்குப் பிறகு நெடுகிலும் எத்தனை ஏமாற்றங்கள்? எத்தனை தந்திர மந்திரங்கள்? எத்தனை மாயா ஜாலங்கள்?

நியாயமாக இந்தக் காஞ்சிமா நகரம் இதற்குள்ளே தமது காலடியில் விழுந்து கிடக்க வேண்டும். ஐசுவரிய கர்வமும், கலைக் கர்வமும் கொண்ட காஞ்சி மக்கள் தம் முன்னிலையில் நடுநடுங்கிக் கொண்டு உயிர்ப் பிச்சை கேட்டுக் கொண்டிருக்க வேண்டும். ஆ! இந்த மகேந்திர பல்லவனுடைய மணிமுடியைத் தமது காலால் உதைத்துத் தள்ளியிருக்க வேண்டும்!

ஒன்றரை வருஷத்துக்கு முன்னால் வட பெண்ணைக் கரையில் நின்றிராமல் நேரே முன்னோக்கி வந்திருந்தால் இதெல்லாம் சாத்தியமாகியிருக்கும். இப்போது காஞ்சியிலும் உறையூரிலும் மதுரையிலும் கூட வராகக் கொடி பறந்து கொண்டிருக்கும்.

இதெல்லாம் நடக்காமற் போய் விட்டதன் காரணம் என்ன? - எல்லாம் மகேந்திர பல்லவனுடைய மாய தந்திரங்கள்தான்.

வன விலங்குகளையெல்லாம் கதிகலங்கச் செய்யக்கூடிய வீரப் புலியைக் கேவலம் ஒரு நரி- வளையில் பதுங்கி வாழும் நரி- தந்திரத்தினால் வென்று விட்டது!

இதை நினைக்க நினைக்க, வாதாபிச் சக்கரவர்த்திக்குக் கோபம் மேலும் மேலும் பொங்கிக் கொண்டு வந்தது. அவருடைய நெற்றியின் நரம்புகள் ஒவ்வொன்றும் புடைத்துக் கொண்டு நின்றன. அவருடைய முகத்தைப் பார்த்தவர்கள் என்ன விபரீதம் வரப் போகிறதோ என்று அஞ்சி நடுங்கினார்கள்.

**கா**ஞ்சி நகரிலிருந்து வெளியேறியது முதல் அந்த நகருக்கு வடக்கே ஒரு காத தூரத்தில் சளுக்கர் பெருஞ் சைனியம்

தங்கியிருந்த இடத்துக்குப் போய்ச் சேரும் வரையில் வாதாபிச் சக்கரவர்த்தி வாய் திறந்து பேசவில்லை. இந்த விபரீத அமைதியானது அவருடன் சென்றவர்களுக்கெல்லாம் பீதியை ஊட்டியது.

சக்கரவர்த்தி கூடாரத்தை அடைந்ததும், எரிமலை நெருப்பைக் கக்க ஆரம்பித்தது. வாதாபியின் படைத் தலைவர்களும் பண்டக சாலைத் தலைவர்களும், ஒற்றர் படைத் தலைவர்களும் புலிகேசியின் கோபாக்னியில் எரிந்து பொசுங்கினார்கள்.

தளபதிகள் முதலியோர் மந்திராலோசனைக்காக வந்து கூடியதும், "உங்களில் பாதிப் பேரை யானையின் காலால் இடறச் செய்யப் போகிறேன்; மிச்சப் பாதிப் பேரைக் கழுவிலே ஏற்றப் போகிறேன்!" என்று புலிகேசி ஆரம்பித்தார்.

அதைக் கேட்டு மௌனமாயிருந்த சபையினரைப் பார்த்து "ஏன் சும்மா இருக்கிறீர்கள்? எல்லாருக்கும் வாய் அடைத்துப் போய் விட்டதா?" என்று கர்ஜித்தார்.

பின்னர் சரமாரியாக அவர் வசை பாணங்களைப் பொழிந்தார். தென்னாட்டுப் படையெடுப்பில் நாளது வரையில் ஏற்பட்டிருந்த முட்டுக்கட்டைகள், தோல்விகள், ஏமாற்றங்கள் எல்லாவற்றுக்கும் அவர்கள்தான் காரணம் என்று குற்றம் சாட்டினார்.

"வீரம் மிகுந்த படைத் தலைவர்களே! புத்தியிற் சிறந்த ஒற்றர்களே! கேளுங்கள்! இந்தக் காஞ்சி நகரின் கோட்டை வாசல்களுக்கு ஒரு சமயம் வெறும் ஒற்றை மரக் கதவு போட்டிருந்தது. அப்போது நாம் வந்திருந்தால் நம்முடைய யானைகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கோட்டை வாசலைத் திறந்து விட்டிருக்கும். இந்தக் கோட்டை மதிலைக் காக்க அப்போது பத்தாயிரம் வீரர்கள் கூட இல்லை. நமது வீரர்கள் ஒரே நாளில் அகழியைக் கடந்து மதிலைத் தாண்டி உள்ளே புகுந்திருக்கலாம். இந்த மகேந்திர பல்லவன் ஓடி வந்து என் காலில் விழுந்திராவிட்டால், காஞ்சியை லங்காதகனம் செய்திருப்பேன். அப்படிப்பட்ட காஞ்சி நகரில் என்னை அந்தப் பல்லவன், இல்லாத அவமதிப்புகளுக்கெல்லாம் உள்ளாக்கினான். ஒரு கல்தச்சனுக்கும் ஒரு கூத்தாடிப் பெண்ணுக்கும் முன்னால் என்னை அவமானப்படுத்தினான்! எனக்குக் கலை தெரியாதாம்! ரஸிகத் தன்மை இல்லையாம்! என்ன கர்வம்! என்ன அகம்பாவம்!" என்று கூறிப் பற்களை நறநறவென்று கடித்துத் தரையில் காலால் உதைத்தார் புலிகேசி மகாராஜா!

பிறகு, "மகேந்திர பல்லவன் இந்தக் காஞ்சிக் கோட்டையைப் பழுது பார்த்துச் செப்பனிட்டுக் கொண்டிருந்த போது, நீங்கள் வடபெண்ணைக் கரையில் சாவகாசமாகத் தூங்கிக் கொண்டிருந்தீர்கள்!" என்று கூறிப் பயங்கரத் தொனியுடன் சிரித்தார்.

அப்போது வாதாபி ஒற்றர் படைத் தலைவன் சிறிது தைரியம் கொண்டு, "பிரபு! எல்லாம் நாகநந்தியின் ஓலையால் வந்த வினை! அப்போதே நான் ஆட்சேபித்தேன்!" என்றான்.

புலிகேசி கண்ணில் தீப்பொறி பறக்க அவனைப் பார்த்துச் சொன்னார் : "திர்மூடா! உன்னுடைய முட்டாள்தனத்துக்கு நாகநந்தி மேல் பழி போடப் பார்க்கிறாயா? நாகநந்தி ஒருநாளும் தப்பான யோசனை கூறியிருக்க மாட்டார். நமக்கு வந்த ஓலை நாகநந்தியின் ஓலை அல்ல. நாகநந்தியின் ஓலையை இந்தத் திருடன் மகேந்திரன் நடுவழியில் திருடிக் கொண்டு விட்டான். அது மட்டுமா? வேறு பொய் ஓலை எழுதி இவனே மாறுவேடத்தில் என்னிடம் அதைக் கொண்டு வந்து கொடுத்தான். நமது புத்திசாலிகளான ஒற்றர்களால் இதையெல்லாம் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆஹா!.... நாகநந்தி மட்டும் அச்சமயம் நம்முடன் இருந்திருந்தால், இப்படியெல்லாம் நடந்திருக்குமா? இந்தப் பல்லவ நரியின் தந்திரமெல்லாம் அவரிடம் பலித்திருக்குமா...? நீங்கள் இவ்வளவு பேர் இருந்து என்ன பயன்? புத்த பிக்ஷு ஒருவர் இல்லாததனால் நமது பிரயத்தனமெல்லாம் நாசமாகி விட்டது!...

நாகநந்தியைப் பற்றிப் பேச ஆரம்பித்தவுடனே சக்கரவர்த்தியின் உள்ளம் கனிவடைந்து, பேச்சும் கொஞ்சம் நயமாக வந்தது. இதுதான் சமயம் என்று வாதாபி சேனாதிபதி, "பிரபு! போனது போயிற்று! இப்போது நமது சைனியத்தை வாதாபிக்குப் பத்திரமாகக் கொண்டு போய்ச் சேர்ப்பதைப் பற்றி யோசிக்க வேண்டும். நாள் ஆக ஆக, நாம் திரும்பிப் போவது கடினமாகி விடும்..." என்று கூறி வந்த போது, புலிகேசி, இடிமுழக்கம் போன்ற குரலில், "சேனாதிபதி! என்ன சொன்னீர்? திரும்பிப் போகிறதா?" என்று கர்ஜனை செய்தார். மறுபடியும், "தளபதிகளே! கேளுங்கள்! நாகநந்தியடிகள் இந்தக் காஞ்சிக் கோட்டைக்குள்ளே பல்லவனுடைய சிறைக்கூடத்தில் அடைபட்டுக்

அமரர் கல்கி

கிடக்கிறார். இளம்பிள்ளைப் பிராயத்தில் பெற்ற தாயைப் போல் என்னை எடுத்து வளர்த்துக் காப்பாற்றியவர்; என் உயிரைக் காப்பதற்காகத் தம் உயிரைப் பல தடவை பலி கொடுக்கத் துணிந்தவர்; வாதாபிச் சிம்மாசனத்தில் என்னை ஏற்றி வைத்தவர்; உத்தராபதத்தின் மகா சக்கரவர்த்தி ஹர்ஷ வர்த்தனரை என்னிடம் சமாதானம் கோரித் தூது அனுப்பச் செய்தவர்;- அத்தகைய மகா புத்திமான் இந்தப் பல்லவ நரியின் வளை யிலே அடைபட்டுக் கிடக்கிறார்; அவரை அப்படியே விட்டு விட்டு நாம் ஊருக்குத் திரும்பிப் போக வேண்டுமென்று சொல்கி றீர்கள். ஒருநாளும் இல்லை. படைத் தலை வர் களே! காஞ்சிக் கோட்டையைத் தாக் கும் படி உடனே நமது வீரப் படை களுக்குக் கட்டளையிடுங்கள். காஞ்சியைப் பிடித்து, மகேந்திர பல்லவனுடைய மாளி கையைச் சுட்டெரித்து, மகேந்திரனுடைய தலையை மொட்டையடித்து நமது தேர்க் காலில் கட்டிக் கொண்டு வாதாபிக்குத் திரும்பிப் போவோம். நாகநந்தியடிகளைச் சிறை மீட்டு அவரை நமது பட்டத்து யானையின் மீது வைத்து அழைத்துப் போவோம்! உடனே புறப்படுங்கள்!'' என்று கூறி நிறுத்தினார். சபையில் சற்று நேரம் நிசப்தம் குடிகொண்டிருந்தது.

''இது என்ன மௌனம்? ஏன் பேசா திருக்கிறீர்கள்? பல்லவ நாட்டுக் கற்சிலை களைப் பார்த்துவிட்டு நீங்களும் கற்சிலை யாகப் போய் விட்டீர்களா?'' என்று சக்கர வர்த்தி கேட்டார்.

அதன் பேரில், தளபதிகள் ஒவ்வொரு வராகத் தம் அபிப்பிராயங்களைச் சொல்ல லானார்கள்.

யானைப் படைத் தலைவர், யானை கள் எல்லாம் உணவின்றி மெலிந்து விட் டன. என்றும், அவற்றின் வெறி அதிகமாகி வருகிறதென்றும், சில நாள் போனால் யானைகள் கட்டுமீறிக் கிளம்பி நமது வீரர் களையே அழிக்க ஆரம்பித்து விடுமென் றும் கூறினார்.

காலாட் படைத் தலைவர், காஞ்சிக் கோட்டையைத் தாக்கும்படி வீரர்களை ஏவுதல் இயலாத காரியம் என்றும், அவர்கள் ஏற்கெனவே சோர்வும், அதிருப்தி யும் கொண்டு ஊருக்குத் திரும்பிப் போகத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும் தெரிவித்தார்.

பண்டகசாலை அதிபதி, இன்னும் சில நாள் போனால் எல்லாரும் பட்டினியி னாலேயே செத்துப் போக நேரிடுமென்று கூறினார்.

ஆயுதசாலை அதிபதி, கோட்டையைத் தாக்குவதற்கு வேண்டிய ஆயுதங்கள் இல்லையென்றும், கொண்டு வந்தவை யெல்லாம் முன் தாக்குதல்களில் நஷ்ட மாகி விட்டன என்றும் சொன்னார்.

இதையெல்லாம் கேட்கக் கேட்கப் புலிகேசிக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. ஆயினும் அவ்வளவு பேரும் சேர்ந்து சாத்தியமில்லையென்று சொல் லும் போது அந்த ஒரு முகமான அபிப் பிராயத்துக்கு மாறாகக் கோட்டையைத் தாக்கத்தான் வேண்டுமென்று சொல்லப் புலிகேசிக்குத் துணிச்சல் வரவில்லை.

''ஆஹா! உங்களை நம்பி நான் இந்தப் படையெடுப்பை ஆரம்பித்தேனே!'' என்று வெறுப்புடன் பேசி விட்டு, ''இருக்கட டும், எல்லாரும் போய்த் தொலையுங்கள். இன்றிரவு யோசித்து நாளைக்கு முடிவு சொல்லுகிறேன்!'' என்றார்.

# இருபத்திரண்டாம் அத்தியாயம்

# புலிகேசி ஆக்ஞை

அன்றிரவு மட்டுமல்ல; மறு நாளும் அதற்கு மறுநாளும் கூடப் புலிகேசி அவ்விடத்தி லேயே இருந்து யோசனை செய்தார். அ ங் கி ரு ந் து தெற்கே காத தூரத்தில் தெரிந்த காஞ்சிமா நகரின் கோபுரங்களையும் ஸ்தூபிகளையும் பார்க்கப் பார்க்க அவருடைய கோபம் கொந்தளித்துப் பொங்கிற்று. அந் நகரின் பாதாள காராக்கிருகம் ஒன்றில் நாகநந்தி அடிகள் சிறைப்பட்டுக் கிடக்கிறார் என் பதை நினைத்த போது அவருடைய கோபத் தீயில் எண்ணெய் ஊற்றுவது போலிருந்தது. மகேந்திர பல்லவன் பேரில் எப்படியாவது பழிவாங்க வேண்டும் என்னும் எண்ணம் நிமிஷத்திற்கு நிமிஷம் வளர்ந்து சீக்கிரத்தில் வானத்தையும் பூமியையும் அளாவி நின்றது.

இரண்டு தினங்கள் இரவு பகலாக யோசனை செய்து, கடைசியில் வாதாபிச் சக்கரவர்த்தி சில முடிவுகளுக்கு வந்தார். தமது தளபதிகளையும் பிரதானிகளையும் அழைத்து அம் முடிவுகளை அவர்களுக்குத் தெரியப்படுத்தினார்.

அந்த முடிவுகள் இவைதான் :

சக்கரவர்த்தியும் முக்கிய தளபதிகளும் சைனியத்தில் பெரும் பகுதியுடன் வாதாபிக்கு உடனே புறப்பட வேண்டியது.

சைனியத்தில் நல்ல தேகக்கட்டு வாய்ந்த வீரர்களாக ஐம்பதினாயிரம் பேரைப் பின்னால் நிறுத்த வேண்டியது. அவர்கள் தனித் தனிக் கூட்டமாகப் பிரிந்து காஞ்சி நகரைச் கற்றிலும் நாலு காத தூரம் வரை உள்ள இராமங்கள், பட்டணங்களை எல்லாம் சூறையாடிக் கொளுத்தி அழித்து விட வேண்டியது. அந்தந்தக் இராமங்களிலுள்ள யௌவன ஸ்திரீகளை எல்லாம் சிறைப் பிடித்துக் கொண்டு, வாலிபர்களை எல்லாம் கொன்று, வயதானவர்களை எல்லாம் அங்கஹீனம் செய்து, இன்னும் என்னென்ன விதமாகவெல்லாம் பழி வாங்கலாமோ அவ்விதமெல்லாம் செய்ய வேண்டியது. முக்கியமாக, சிற்பங்கள் - சிற்ப மண்டபங்கள் முதலியவற்றைக் கண்ட கண்ட இடங்களிலெல்லாம் இடித்துத் தள்ள வேண்டியது. சிற்பிகளைக் கண்டால் ஒரு காலும் ஒரு கையும் வெட்டிப் போட்டு விட வேண்டியது.

இப்படிப்



பட்ட கொடூர பயங்கரமான கட்டளைகளைப் போட்டு அவற்றை நிறைவேற்றுவதற்குத் தக்க பாத்திரங்களையும் நியமித்து ஏவி விட்டு, வாதாபிச் சக்கரவர்த்தி தமது சைனியத்தின் பெரும்பகுதியுடன் பிரயாணமானார்.

மேற்கூறிய கொடூர ஆக்ஞையை நிறைவேற்றுவதற்காகக் காஞ்சியைச் சுற்றிக் கொண்டிருந்த வாதாபி வீரர் கூட்டம் ஒன்றைத்தான் ஆயனரும் சிவகாமியும் காட்டு வழியில் சந்தித்தார்கள்.

**வ**ராகக் கொடியைப் பார்த்து வாதாபி வீரர்கள் என்று தெரிந்து கொண்டதும் சிவகாமிக்குத் தேகமெல்லாம் நடுங்கிற்று. உள்ளம் பதைத்தது. எதிர்ப்பட்ட வாதாபி வீரர்கள் கிட்டத்தட்ட நூறு பேர்தான் என்றாலும், சிவகாமியின் கண்களுக்குப் பதினாயிரம் பேராக அவர்கள் காட்சியளித்தார்கள்.

ஆனால், ஆயனருக்கோ, அம்மாதிரி அச்ச உணர்ச்சி சிறிதும் ஏற்படவில்லை. அவருக்கு உற்சாகமே ஏற்பட்டு விட்டதாக முகமலர்ச்சியிலிருந்து தோன்றியது. முன்னால் நின்ற வீரனைப் பார்த்து, ''ஐயா, நீங்கள் வாதாபி வீரர்கள்தானே? உங்கள் மகாராஜா எங்கே இருக்கிறார்?'' என்று கேட்டார். அந்த வீரனுடைய முக பாவத்தைப் பார்த்ததும் தமிழ் பாஷை அவர்களுக்குத் தெரிந்திராது என்பதை ஞாபகப் படுத்திக் கொண்டு அதே விஷயத்தைப் பிராகிருத மொழியில் கேட்டார். அந்த வாதாபி வீரனுக்கு அதுவும் விளங்காமல் அவன் பின்னால் வந்த படைத் தலைவனைத் திரும்பிப் பார்த்தான். இதற்குள் குதிரை மேல் வந்து கொண்டிருந்த படைத் தலைவன் முன்புறத்துக்கு வந்து சேர்ந்தான். ஆயனரையும் சிவகாமியையும் உற்றுப் பார்த்ததும், அவன் ''ஓஹோ!'' என்ற ஒலியால் தனது வியப்பைத் தெரிவித்தான்.

ஏனெனில், புலிகேசியுடன் காஞ்சி நகருக்குள் வந்து, பல்லவ சக்கரவர்த்தியின் சபையில் சிவகாமியின் நடனத்தைப் பார்த்தவர்களிலே இவனும் ஒருவன். எனவே, அவர்களை அடையாளம் தெரிந்து கொண்டதும் அவனுக்கு வியப்பும் குதூகலமும் உண்டாயின. இன்னும் அவர்கள் அருகில் குதிரையைச் செலுத்திக் கொண்டு வந்து அவர்களை விழித்துப் பார்த்து விட்டு ஆயனரை நோக்கி, ''என்ன கேட்கிறீர்?'' என்றான். ஆயனர் உற்சாகத்துடன், ''ஐயா, உங்கள் சக்கரவர்த்தி எங்கே இருக்கிறார்? அவரை நான் பார்க்க வேண்டும்'' என்றார். தளபதி சசாங்கனின் புருவங்கள் நெரிந்தன. முகத்தில் வேடிக்கைப் புன்னகையுடன், ''வாதாபிச் சக்கரவர்த்தியை நீர் எதற்காகப் பார்க்க வேண்டும்? அவரிடம் உமக்கு என்ன காரியம்?'' என்று கேட்டான்.

''காரியத்தைச் சக்கரவர்த்தியிடம் மாத்திரந்தான் சொல்ல வேண்டும்; அந்தரங்கமான விஷயம்'' என்றார் ஆயனர். அதைக் கேட்டு அவ்வீரன் பரிகாசச் சிரிப்புச் சிரிப்பதைப் பார்த்து விட்டு, ஒருவேளை விஷயத்தைச் சொல்லாவிட்டால் வாதாபிச் சக்கரவர்த்தியிடம் தங்களை அழைத்துப் போக மாட்டார்கள் என்று எண்ணி, ''இருந்தாலும், உங்களிடம் சொல்லவே கூடாது என்பதில்லை. அஜந்தா சித்திரங்களின் அழியாத வர்ண இரகசியத்தைப் பற்றி உங்கள் சக்கரவர்த்திக்குத் தெரியுமாமே, அவரிடம் அதைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்றுதான் வந்தேன். தயவு செய்து என்னைச் சக்கரவர்த்தியிடம் அழைத்துப் போவீர்களா?'' என்றார்.

இதைக் கேட்டதும் தளபதி சசாங்கன் முன்னை விடப் பலமாகச் சிரித்தான். பக்கத்தில் நின்ற வீரர்களைப் பார்த்து, ''ஏன் நிற்கிறீர்கள்? இவர்களுடைய கண்களைக் கட்டுங்கள்'' என்றான்.

ஆயனர் திடுக்கிட்ட குரலில், ''கண்களைக் கட்டுவதா? எதற்காக?'' என்று வினவினார். அதற்குக் குதிரை மேலிருந்த



❑ 'இம்மி' அளவு என்று கூறுகிறோமே, அந்த 'இம்மி' அளவு என்றால் எவ்வளவு என்று தெரியுமா? பத்து இலட்சத்து எழுபத்தையாயிரத்து இருநூற்றில் ஒரு பங்குதான் 'இம்மி' அளவு எனப்படுகிறது.

- ஆதாரம் : சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகத்தாரின் 'கழகத் தமிழ் கையகராதி' என்ற நூல்.

- கல்விடை கே.எல். குமணன்

தளபதி சசாங்கன், ''உமக்கு அவசியம் தெரியத்தான் வேண்டுமா? அப்படியானால் சொல்லுகிறேன். இந்தப் பல்லவ நாட்டி லுள்ள யௌவன ஸ்திரீகளை எல்லாம் சிறை பிடித்துக் கொண்டு வரும்படி வாதாபிச் சக்கரவர்த்தி கட்டளையிட்டிருக் கிறார். அதோடு இந்த ராஜ்யத்தில் உள்ள சிற்பிகளையெல்லாம், ஒரு காலையும், ஒரு கையையும் வெட்டிப் போடும்படி ஆக்ஞா பித்திருக்கிறார். சாதாரண சிற்பிகளுக்கு இந்த ஆக்ஞை. நீரோ சிற்பிகளுக்கெல்லாம் குருவான மகா சிற்பி. ஆகையால், உம்மு டைய இரண்டு கால்களையும் இரண்டு கை களையும் துணித்து விடப் போகிறேன். அதை இந்தப் பெண் பார்க்க வேண்டா மென்றுதான் கண்ணைக் கட்டச் சொன் னேன்!'' என்றான்.

அம்பினால் அடிபட்ட குயிலின் கடைசி மரணக் குரலைப் போல வேதனை ததும்பிய ஒரு குரல் 'கீச்' என்று கேட்டது. சிவகாமி தரையில் விழுந்து உயிரற்ற சவம் போலக் கிடந்தாள்.

சிவகாமிக்கு மறுபடியும் தன்னு ணர்வு வந்த போது தன் தலை இன்னும் சுழன்று கொண்டிருப்பதையும், தன் கால்கள் நடந்து கொண்டிருப்பதையும் இரு பக்கத்திலும் இருவர் தன் கைகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நடத்தி வருவதையும் கண்டாள்.

சிறிது சிறிதாக அவளுக்குப் பிரக்ஞை வந்து சற்று முன் நடந்த சம்பவங்களும் நினைவுக்கு வந்தன. பக்கத்தில் தன் தந்தை இல்லை என்பதை உணர்ந்தபோது அவ ளுடைய வாழ்நாளில் இதுவரை அனுபவித் திராத இதய வேதனை உண்டாயிற்று. பிரமை பிடித்த நிலையில் பக்கத்தில் நின்ற வீரர்களால் உந்தப்பட்டு இன்னும் சில அடி தூரம் நடந்து சென்ற போது, அருகில் அடர்ந்த காட்டுக்குள்ளிருந்து திடீரென்று ஓர் உருவம் வெளிப்பட்டதைக் கண்டாள். பார்த்த கணத்திலேயே அந்த உருவம் நாகநந்தி அடிகளின் உருவந்தான் என்பதும் தெரிந்து விட்டது. உடனே ஆவேசம் வந்த வள் போலத் தன்னைப் பற்றியிருந்த வீரர் களின் கைகளிலிருந்து திமிறிக் கொண்டு விடுபட்டு நாகநந்தி அடிகளின் முன்னால் சிவகாமி பாய்ந்து சென்றாள். அவருடைய காலடியில் விழுந்து நமஸ்கரித்து, ''சுவாமி! தாங்கள்தான் கதி! காப்பாற்ற வேண்டும்!'' என்று கதறினாள்.

*(தொடரும்)*

## அருள்வாக்கு



ஒரே தெய்வத்தை இஷ்ட மூர்த்தி யாகக் கொண்டு வழிபடுவதே சித்த ஒரு மைப்பாட்டுக்கு உதவுவதாகத் தோன்ற லாம். இதில் நியாயம் உண்டு. இதனால் இன்னொரு மூர்த்தியைத் தாழ்வாக எண்ணக் கூடாது. தங்கள் இஷ்ட தெய் வத்தையே பரம்பரையாக வந்த குலதெய் வத்தையே உபாசிக்கலாம். ஆனால் அப் போதும், 'ரூபமற்ற பரமாத்மாவையே நாம் இந்த ரூபத்தில் வழிபடுகிறோம். எனவே இந்த மூர்த்தி பரமாத்மாதான். அதே பரமாத்மா மற்ற ரூபங்களும் எடுத்துக் கொள்ள முடியும்; அதாவது நம் தெய்வமேதான் மற்றவர்கள் வழிபடு கின்ற ஏனைய தெய்வங்களாகவும் உரு வம் கொண்டிருக்கிறது' என்ற உணர்ச்சி ஏற்பட வேண்டும். நம் தெய்வமேதான் மற்ற தெய்வங்களாகவும் உள்ளது என்று நினைத்து விட்டால் நமக்கு அந்த மற்ற ரூபங்களில் பிடிப்பு உண்டாகா விட்டா லும் கூட அவை நம் தெய்வத்தை விடத் தாழ்ந்தது என்ற எண்ணம் வரவே வராது. சமயச் சண்டைகளும் உண்டா காது. எல்லோரும் ஒரே பரமாத்மாவின் குழந்தைகளாக அன்போடு ஐக்கியப்படு வதற்காக ஏற்பட்ட மதத்தில், தெய்வங் களின் பெயராலேயே சண்டையும், துவே ஷமும் உண்டாகிற நிலை மறைந்து சௌ ஜன்யமும் சாந்தியும் நிலவும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச் சார்ய சுவாமிகள்.**

# நதியின் தாகம்

பொன்விழா நாடகப் போட்டி



காட்சி - 1

இடம் : திருச்சி சத்திரம் பஸ் நிறுத்தம்.
காலம் : செவிகளைத் தாக்கும் சித்திரை வெயில் காலம். மதியம் இரண்டு மணி.

அருணா : ஏம்மா... இந்த பஸ் பழூர் போகுமா?
(நெற்றியிலிருந்து வெயில் கண்ணாடியை இறக்கிவிட்டுக் கொள்கிறாள், வியர்வையில் நனைந்த அவள் உடல், உள் உடைகள், இவற்றைத் தீண்டும் எத்தனை.. எத்தனை கண்கள்!)
(இரும்பவும்) ஏம்மா, ஆரஞ்சு பொடவை! இந்த பஸ் பழூர் போகுமா?

குரல் 1 : (பஸ்ஸிலிருந்து) போகும்மா... நீ ஏறு.... ஆனா! இங்கிட்டு நிக்கக்கூட எடமில்லே. எளுபது பேரை ஏத்திக்கிட்டிருக்கானுக... நீயும் ஏறு...!
(அருணா பஸ்ஸில் ஏறுகிறாள். ஒருவன் - கறுப்புச் சட்டை - வெள்ளை பாண்ட் - சீழ்க்கையில் "மாங்குயிலே...." வாசிக்கிறான்.)

குரல் 2 : யோவ்.... தாய்க்குலம் வருது.... வழிவிடு...
(வழிவிட்டவன் அருணாவின் மீது உரசிப் பார்க்கிறான்....)
(அருணா, வலக்கையில் ஒரு சூட்கேஸ்..... இடக்கையில் ஒரு ப்ளாஸ்டிக் கேன் சஹிதம் நெரிசலில் வழி தேடி, தள்ளப்பட்டு, தள்ளி, ஒரு வழியாக 'ஆரஞ்சுப் புடைவை' அருகே இடம் பிடித்து நிற்கிறாள்)

குரல் 3 : (முதியவள் - அரக்காக வெற்றிலை மசியல் மென்று கொண்டே, அருணாவின் கரம் பற்றி,)

ஜி.எச்.எஸ்.மணியன்

ஏம்மா.... கேன்லே சீமெண்ணையா? ரேஷன்லே போட்டுட்டாங்களா, ஏம்மா?

அருணா : (ஒரு புன்னகை சேர்த்து) இல்லே பாட்டி... கங்கை ஜலம்...

குரல் 3 : ஏம்மா... அந்த கேன்லேந்து குடிக்கக் கொஞ்சம் தண்ணி கொடேன்....

அருணா : ......

குரல் 3 : அட கொஞ்சம் தண்ணி கொடும்மா... நா பட்டவாத்தலை வரைக்கும் போவனும். நாக்கு மரத்தாளு தின்ன மாதிரி இருக்கு...

அருணா : பாட்டி! இது கங்கை ஜலம். ரொம்ப கஷ்டப்பட்டு கொண்டு வந்துருக்கேன். ஒரு காரியத்துக்காக எடுத்துண்டு போறேன்.... உனக்குக் கொடுத்தா பஸ்லே எல்லாரும் கேட்பாங்களே பாட்டி.....!



பாட்டி : மெய்தாம்மா... என்ன அக்கு ரமம் இது. ஊட்லே பைப்லே தண்ணி இல்லே... கேணிலே இல்லே... காவேரிலே இல்லே...

**(வெளியில் சோடா, கலர், மல்லிப்பூ, வெள்ளிக்கா, நன்னாரி சர்பத் குரல்களின் ஜ~கல் பந்தி.)**

அருணா : டேய் தம்பீ... ஒரு சர்பத் கொடுப்பா... ஏக்படாக்ளாஸ் (உடனே திருத்தி) கொஞ்சம் பெரிய டம்ளர்லே தா.....

(மஞ்சள் கலரில் எலுமிச்சை ஷர்பத், மேலே மிதக்கும் பழக் கொட்டைகள்....) பாட்டி இதைக் குடிங்க... தாகம் அடங்கும்.

பாட்டி : (தாகம் விஸ்வருபம் எடுக்க) கொடும்மா... (ஒரு ஜீவ நதியையே உறிஞ்சுவது போல் ஷர்பத்தை உறிஞ்சித் தீர்க்கிறாள்)

(க்ளாஸை வாங்கும் அருணாவிடம்) நீ நல்லா இருப்பேம்மா... நிக்கறயே.... இப்படி எம் பக்கத்துலே ஒக்காரேன்.... (அருகில் அமர்ந்திருந்த குண்டுச்சிறுமியிடம்) ஏண்டி சிறுக்கி! நீ போயி ஒங்க ஆத்தா மடிலே ஒக்காருடி.... நீ இப்படி ஒக்காரும்மா... கங்கையை ஏன் சொமந்துகிட்டே நிக்கறே. அந்த கேனைக் கீழே வையேன் கண்ணு!

அருணா : (குண்டுச் சிறுமியைத் தன் மடியில் அமர்த்திக் கொண்டு) பாட்டி கேன் ஒடைஞ்சா அப்புறம் மாதா கங்கை இந்த பஸ்லே ப்ரவாகம் எடுத்துடுவா...

பாட்டி : யாராவது எறந்துட்டாங்களா?

அருணா : எங்க தாத்தா... பழூர் ஸ்வாமிநாத அய்யர்... செத்துண்டு இருக்கார். வடக்கே நெறைய வருஷம் இருந்தார்... பெரிய சுதந்திர போராட்டத் தியாகி. வீணை வித்வான் கூட.....

குரல் 4 : (சிறுவன், ஏதோ ஞாபகம் வந்தவனாய், யூரேகா ஸ்டைலில்) அப்பா, அப்பா இந்த பஸ்லே போறப்ப நாம காவேரியைப் பார்ப்போமில்லே... காவிரி ரொம்ப பெரிய நதியாப்பா? பயங்கரமா ஓடுமாப்பா!

அப்பா : அடச்சீ.... வெயில்லே இவன் வேறே.... காவேரி எங்கடா ஓடறது? அதைத்தான் அவனவன் வழிலே புடிச்சு வச்சுக்கறானே....

குரல் 5 : இனிமேட்டு பாருங்க சேர்வை... திருச்சிலே ஓடற காவிரியைத் திருச்சி கலெக்டரு முடக்கிடப் போறாரு.... தஞ்சாவூர்லே.... நெலைமையைப் பாருங்க.... கதிர் அறுக்கறவனெல்லாம், கழுத்தை அறுத்துண்டு சாகப் போறானுங்க... இதுக்கு ஒரு கச்சி.. இதுக்கு ஒரு ஆச்சி...

## காட்சி - 2

(அருணாவின் மனம் ரிவர்ஸ் கியரில்)

இடம் : அலஹாபாதில் ஜூரி தாராகஞ்சில் ஒரு வீதி. அருணாவின் இல்லம்.

காலம் : புழுதிப் புயல் சுற்றி வீசும் வெயிற்காலம். இரவு - சமாச்சார் நேரம்.

**(அருணா கணவரை வழி அனுப்புகிறாள். டெலிபோன் அடிக்கிறது. இரண்டு முறை அடித்து உடனே நிற்கிறது. அருணாவின் கணவர் 'எதுவா இருந்தாலும் நீ பார்த்துக்கோ டியர்' என்று சொல்லி, கை அசைத்து, அவளுக்குக் காற்றில் முத்தம் ஈந்து காரைக் கிளப்புகிறார்)**

அருணா : (மனதிற்குள் ) டெலிபோன் அடிக்கதே. யாரா இருக்கும். கிரிஜாவா? (திரும்பவும் டெலிபோன் சங்கீதமாகக் குதிக்கிறது) கோன்? அரே... கோன் ஹை?...

டெலிபோன் குரல் : ஹல்லோ அருணாவா? - அம்மாடி....

அருணா : (ஒரு அதிர்ச்சியான உற்சாகத்தில்) அப்பாவா?.... அப்பா நீங்க சௌக்யமா? அம்மா சௌக்யமா? என்ன இந்த நேரத்துலே... சத்தமா



பேசுங்கோ... சத்தமா....

அப்பா : அருணா! தாத்தாவுக்கு ரொம்ப முடியலே. ஹாஸ்பிடல்லேருந்து அழைச்சுண்டு வந்துட்டோம். டாக்டர் கையை விரிச்சுட்டான்.

அருணா : அப்பா!...

அப்பா : கேளும்மா. நா இங்கே எஸ்டிடி பூத்லேருந்து பேசறேன். ஜாஸ்தி பேச முடியாது. தாத்தா இஸ் ஃபினிஷிட்... இன்னும் ரெண்டு, மூணுநாள்தான் டயம் கொடுத்துருக்கான் டாக்டர்.

அருணா : (அழுகையைச் சப்பிக் கொண்டு) அப்பா, நான் உடனே கௌம்பி வர்றேம்ப்பா... இவர் மொரீஷியஸ் போயிருக்கார். எதோ ஆடிட்டிங்காம். என்ன சொல்லறேள்...? சத்தமாப் பேசுங்கோ....

அப்பா : நீ அவசியம் வரணுமா அருணா? வயசாச்சு... இதெல்லாம் நாம எதிர் பார்த்ததுதானே. ஒனக்கு யூனிவர் சிடிலே ஒர்க் இருக்குமே?

அருணா : அப்பா!.... என்னைப் பெத்தது மட்டும் தான் நீங்க, அம்மா... பாக்கி எல்லாம் தாத்தாதான்.. நா உடனே புறப் படறேன். எதாவது ஆனாக்கூட, நா வந்த ஒடனே எடுங்கோ.. எனக்குத் தாத்தாவைப் பார்க்கணும்ப்பா....
(புடைவையைக் கடித்துக் கொண்டு சன்னமாக அழுகிறாள்.)

## காட்சி - 3

(ஃப்ளாஷ்பேக்)
இடம் : அலஹாபாத் யுனிவர்சிடி கேம்பஸ் - ரிஸப்ஷன்
காலம் : கடுமையான குளிர் காலம்.
நேரம் : மதியம் இரண்டு மணி.

அருணா : (சூழ்நிலைகளைப் புறத்தே நிறுத்தி) மைஸ்வீட் தாத்தா! (கட்டிக் கொள்கிறாள்) எல்லா எடமும் சுத்திப் பார்த்துட்டேளா?
**(தாத்தா அருணாவை அணைத்துக் கொண்டு வெளியே வருகிறார். பல் கலைக் கழக வளாகத்தில் இருவரும் நடக்கிறார்கள்.)**

தாத்தா : எல்லாம் ரொம்ப சௌகர்யமா இருந்துதுமா...

அருணா : டோங்கா ஸவாரி எப்படி, தாத்தா? பாட்டி இல்லே இப்போ....
(கள்ளமாகச் சிரிக்க)

தாத்தா : அம்பாரி மேலே ராஜா ஒக்கார்த் துண்டு போறமாதிரின்னா ஜம்முன்னு ஸீட் கட்டி வச்சிருக்கான். அடிக்கடி உங்க பாட்டி ஞாபகம்தான் வருது அருணா. பாவம்! காவேரிலே ஸ்நானம் பண்ணப் போயிருக்கா... எதோ நாய் குரைக்கற சத்தம் கேட்டிருக்கு... உங்க பாட்டிக்கு நாய்னாலே பயம்... சட்டுனு கொஞ்சம் ஆழத்துக்குப் போயி ருக்கா..... போய்ட்டா....
**(தாத்தாவின் குரல் அந்த சோகத்தில், அல்லது அந்தக் குளிரில் நடுங்கிப் பிறழ்கிறது. அருணா தன் மேலிருந்த சால்வையை எடுத்துத் தாத்தாவுக்குப் போர்த்துகிறாள். கதகதப்பாகத் தாத்தா வின் நெஞ்சை நீவி விடுகிறாள். தாத்தா நார்மலாகி....)**
அருணா... ஒரு விஷயம் தெரியுமோ?.... ஒனக்கு அருணான்னு பேர் வச்சதே பாட்டிதான். சுதந்திரம் கெடைச்ச வாரம் நீ பொறந்தே.... நம்ம தேசத் துக்கே புதிய அருணோதயம் கெடைச் சதே....

அருணா : அதுதான் முன்னமே சொல்லி யிருக்கேளே. சரி இங்கே கோவில் பார்த் தேளா? இந்த ஊர்க் கோவில்லே விக்ரகங்களைத் தொட்டே பார்க்க லாம்.. டோங்காக்காரன் அழைச்சுண்டு போனானா?

தாத்தா : பீஷ்மம்னு ஒரு எடம், அருணா, அஸ்திரப் படுக்கைலே பிதாமகர் இருக் கார். அவரோட பிரதாபங்களை டோங்காவாலா என்ன அழகா சொல்ல றான். எங்கடா இதெல்லாம் கத்துண் டேன்னு கேட்டேன். டிவிலே மகாபார தம் பார்த்தானாம். நம்ம கோயில்லே உள்ள தாத்பர்யங்களை நன்னா புரிஞ்சு சொல்லறான். டோங்காக்காரன் பேர் என்ன தெரியுமோ. முகம்மது அலி....!

அருணா : (நெஞ்சிலிருந்து ஒரு பெருஞ் சுமையைக் கழற்றி வைப்பது போல) : தாத்தா... நம்ம மந்திர் - மசூதி பிரச் னைக்கு விடை கெடைச்சாச்சு. மதங் களைக் கடந்த, பாசாங்கு இல்லாத மனித நேயம்தான் உண்மையான, நிரந் தரமான தீர்வு.
**(தாத்தா அருணாவைத் தட்டிக் கொடுக் கிறார். அருணா அவர் தோளில் சாய்ந்து கொள்கிறாள்)**

## காட்சி - 4

இடம் : திருச்சி - கரூர் சாலை.
காலம் : மதியம், காற்று அனல் இழை களை நெய்து வெப்பப் போர்வையாய்



"தலைவருக்குப் பதவி ஆசை ஜாஸ்தி யாயிடுச்சு."
"எப்படி சொல்றே?"
"பேரனுக்குக் கதை சொல்லும்போது கூட 'ஒரே ஒரு ஊர்ல'ன்னு ஆரம்பிக்காம 'ஒரே ஒரு சேர்ல'ன்னு ஆரம்பிக்கிறார்!"
- ஆர். புருஷோத்தமன்



''நாடு ரொம்ப கெட்டுப் போச்சுங்க!''
''எப்படி சொல்றீங்க?''
''புது ஆபிசைத் திறந்து வைப்பவர் குப்புசாமி, குத்து விளக்கேற்றுபவர் சரஸ்வதி, முதல் லஞ்சத்தைப் பெற்றுக் கொள்பவர் மானேஜர் ராமசாமி'ன்னு அழைப்பிதழ்ல போட்டிருக்கே!

- எஸ். முகம்மது யூசுப்

வீசுகிறது. மாலை மணி மூன்றரை.

*(திருச்சி - பட்டவாய்த்தலை பஸ் ஒரு ஆக்ரோஷ உலுக்கலுக்குப் பின் நின்று விடுகிறது.)*

கண்டக்டர் : என்னப்பா, தொர்ராஜு..... என்னப்பா ப்ராப்ளம்....

குரல் 1 : சரியான ராகு காலத்துலே வண்டியை எடுத்தானுக... துட்டையெல்லாம் ரீபண்டு பண்ணுப்பா....

துரைராஜ் : செல்வம், கியர் பாக்ஸுலே ப்ராப்ளம்... ஷெட்டுலே வண்டி எடுக்கறப்பவே முட்டிண்டேன்யா... அல்லாரையும் எறக்கிவிடு. (பீடி கொளுத்துகிறான்.)

*(முனகலுடன், கோபத்துடன், தகாத வார்த்தைப் ப்ரயோகங்களுடன், தொண்டைச் செருமல்களுடன் பயணிகள் பஸ்ஸிலிருந்து இறங்குகிறார்கள். வெற்றிலை மசியல் மெல்லும் கிழவி தன்னாமையோடு, திசை தெரியாது நிற்கிறாள்.*

*அருணா, இடக்கையில் சூட்கேஸும் வலக் கையில் கங்கை ஜலமும் பிடித்துக் கொண்டு, அந்தச் சுட்டெரிக்கும் வெயிலில் நடக்க ஆரம்பிக்கிறாள்)*

அருணா : (சாலையில் மாடு மேய்க்கும் ஒருவனிடம்) ஏங்க, பழூர் இங்கேருந்து பக்கமா?

மாடு மேய்ப்போன் : இது முருங்கம் பேட்டைம்மா... அடுத்தது முத்தரசநல்லூர், அப்புறம் பழூருதான். ரெண்டு மைலு இருக்கும் தாயி.....

*(அருணா அவனுக்கு நன்றி சொல்லி நடக்கிறாள். ஒரு சிறுவனின் அவலக் குரல் அவள் கவனத்தைச் சிதற அடிக்கிறது. சாலை ஓர மர நிழலில்....)*

அருணா : அட, நிறுத்தும்மா! அந்தப் பையனைப் போட்டு ஏன் அப்படி அடிக்கறே...

அடிக்கும் பெண் : பின்னே என்னம்மா... ரொட்டித் துண்டு இங்கக் கேட்டான்.... கொடுத்தேன். விக்கி விக்கி... தண்ணீ... தண்ணீ..ன்னு கத்தினான். ஒரு பாட்டிலு தண்ணிதான் வச்சிருந்தேன்... பாட்டிலை இந்த பாவிப்பய போட்டு ஒடைச்சுட்டான்.

*(அருணா, உடைந்த பாட்டிலைப் பார்க்கிறாள். அந்தச் சிறுவனின் உதட்டிலிருந்து ரத்தம் பெருகி வழிவதையும், அவன் கரத்தில் காய்ந்த ரொட்டித் துண்டுகளும் பார்க்கிறாள். அந்தப் பெண் - காச நோயாளி போல - அழுக்கு உடம்பு, பென்சில் பென்சிலாய்க் கைகள், அவள் மார்பில் பாலின் மிச்சங்களைத் தேடி, கிடைக்காது அழும் சிசு....)*

அருணா : அதுக்கு ஏன் பையனை இப்படிப் போட்டு அடிக்கறே....

பையன் : யம்மா.. நெஞ்சு வலிக்குதும்மா, தண்ணி கொடும்மா.

அருணா : டேய், தம்பீ இந்தாடா தண்ணி...

*(ப்ளாஸ்டிக் கேனைத் திறந்து கங்கை ஜலத்தைச் சிறுவனுக்குத் தருகிறாள்... வலது கையைப் புனல் போல் குவித்து, சிறுவன் அந்த புனித நீரைக் குடிக்கிறான்... யுகங்களாய்ச் சேர்த்து வைத்த தாகம் போலும்! அவனை அடுத்து, அந்தப் பெண் அருணாவிடமிருந்து கங்கை நீர் வாங்கி அவள் மார்புகளில் வழியக் குடிக்கிறாள்.*

*அருணா, மிச்சமுள்ள கங்கை நீருடன் சாலையைக் கடந்து காவிரிக் கரைக்கு நடக்கிறாள்....)*

## காட்சி – 5

இடம் : காவிரிக் கரை.

*(பூவாடையது போர்த்து நடந்த காவிரி.... பெண்ணின் புடைவைத் தலைப்பு போல..... துண்டாய் நீர்... ஒரு சிறுவன் காவிரி மணலில் சிறுநீர் கழிக்கிறான்....)*

அருணா : டேய்! அறிவு கெட்டவனே.... இது காவிரிடா... இதுலே ஏன்டா அசிங்கம் பண்ணறே?...

சிறுவன் : அட.... இதுலே தண்ணி எங்கம்மா ஓடுது.... (ஓடிவிடுகிறான்)

*(விழிகள் செல்லும் பரப்பெல்லாம் வெறும் மணல், கோரைப் புற்கள், மலக் கழிவுகள்.)*

அருணா : (உரக்க) இந்தா நீயும் குடி......

*(மிச்சமுள்ள கங்கை ஜலத்தைக் கவிழ்க்கிறாள். அந்த ஜீவநதி அதை ஆக்ரோஷமாக உறிஞ்சுகிறது. அருணா, மணலில் மண்டியிட்டு, கேனில் உள்ள கங்கை ஜலத்தின் சொட்டுக்களைக் காவிரியில் கலக்கிறாள். உரக்க, உடல் குலுங்க, கண்ணீர் சிந்துகிறாள்)*

# படிச்சுக் கிழிக்க வேண்டாம்

வி.சிவகுமார்

பொன் விழா கவிதைப் போட்டி - இரண்டாம் பரிசு பெறும் மரபுக் கவிதை

*(+2 வில் தேர்ச்சி பெற்றுக் கல்லூரியில் சேர விரும்பிய மகனிடம் ஓர் ஏழைத் தந்தையின் புலம்பல்.)*

ஏண்டாப்பா எம் மவனே
இப்படி நீ செஞ்சுப்புட்டே?
வேண்டாத வேலையெல்லாம்
வெட்டியாக பண்ணிப்புட்டே?

படிக்க வேணாம்னு
படிச்சு படிச்சு சொன்னேனே
அடிச்சுச் சொன்னேன் - நீ
அப்படியும் கேட்கலையே!

பெயிலாகித் தொலைச்சிருந்தா
பேசாம இருந்திருப்பேன்
பாஸாகித் தொலைச்சிட்டியே,
பாவி இப்ப என்ன செய்வேன்?

கூழுக்கே வழியில்லை
கும்பி இங்கே காயுதடா
காலேஜில் சேர்த்துவிட
காசுக்கு எங்கே போவேன்?

மூத்தவ வயசு இப்ப
முப்பத்தொன்னு ஆகுதடா
அடுத்தவ ஆளாகி
அஞ்சு வருஷம் ஆச்சுதடா

மாப்பிள்ளை வாங்கத்தான்
மாடாய் ஒழைக்கிறேன்டா
நல்லவரன் தேடித்தேடி
நாயாய் அலையறேன்டா!

ஒங்க ஆத்தா ஒடம்புக்கு
ஒருநாறு கோளாறு
ஒரு வாயி மருந்துக்கே
நாளெல்லாம் தகராறு

எப்படி நான் சமாளிப்பேன்
எதைச் சொல்லி நானழுவேன்?
இப்ப உன்னைப் படிக்கவைக்க
எங்கே போயி முட்டிக்குவேன்?

வடிக்க அரிசியில்லே
வாயிக்குத் தண்ணியில்லே
படிக்க வைக்க எனக்கு
வழியேதும் தெரியவில்லை!

படிச்சுக் கிழிச்சு - நீ
பாழாப் போக வேணாம்
வடிச்ச கஞ்சி தூக்கி
வாடா நீ வயலுக்கு!





# தீபத்திற்கு எந்த எண்ணெய்விட்டால் என்ன பலன்





## எண்ணெய் பலன்

**நெய் :** தீபத்திற்கு நெய்விடுவது மிகச்சிறப்பு. சகலவித செல்வச் சுகத்தையும் வீட்டில் நலனையும் தருகின்றது.

**நல்ல எண்ணெய் :** நல்ல எண்ணெய் விட்டு ஏற்றுவதால் எல்லா பீடைகளும் விலகி விடுகிறது.

**விளக்கெண்ணெய் :** தேவதாசியம், புகழ்ஜீவன சீரகம், பந்து, சுகம், தாம்பத்திய சுகம் இவைகளை இது விருத்தி செய்கின்றது.

**கடலை எண்ணெய்:** இதில் தீபம் ஏற்றுவது மிகவும் தவறு. அந்த வீட்டில் நித்தியக் கடன், துக்கம், பயம், சோரநாசம், பீடை இவைகளே சேரும்.



## திரியின் வகைகள்

**பஞ்சு:** இதில் திரியிடுவது மிகவும் நல்லது.

**தாமரைத்தண்டு:** இதை திரித்து ஏற்றுவது முன்வினை பாவத்தை போக்கும். செல்வம் நிலைத்து நிற்கும்.

**வாழைத்தண்டு :** இதை நூல் பாகமாகப் பக்குவப்படுத்தித் திரியிட, குழந்தைச் செல்வம் உண்டாகும். தெய்வக்குற்றம், குடும்பச் சாபம் முதலியவை நீங்கி, சாந்தி உண்டாகும்.

**வெள்ளை எருக்கன் :** இதன் பட்டையைத் திரியாகச் செய்து தீபம் போட, பெருத்த செல்வம் தரும். பேய் பிடித்தவர்களுக்கு அதன் தொல்லை தீரும்.

**புது மஞ்சள் சேலைத்துண்டு :** இதிலிருந்து திரி செய்து ஏற்றினால் அம்மன் அருள் கிட்டி வியாதிகள் குணமாகும். காற்று சேஷ்டை நீங்கும்.

**சிகப்புகலர் சேலைத்துண்டு :** திருமணத் தடை, மலட்டுத்தன்மை, பைசாச செய்வினை, தோஷங்கள் விலகிவிடும்.

**புது வெள்ளை வஸ்திரம் :** இதில் பன்னீர் விட்டு காய வைத்து திரியாகப் பயன்படுத்த உத்தம பலனைக் காணலாம்.

## எண்ணெய் கலந்து விட்டு ஏற்றுவதால் ஏற்படும் பலன்

வேப்பெண்ணை, நெய், இலுப்பை எண்ணை மூன்றும் கலந்து தீபமிடுவதால் செல்வம் உண்டாகும். இது குலதெய்வத்திற்கும் உகந்தது.

நெய், விளக்கெண்ணை, வேப்பம் எண்ணை, இலுப்பை எண்ணை, தேங்காய் எண்ணை இந்த ஐந்தும் கலந்து ஏற்றி எவன் ஒருவன் ஒரு மண்டலம் (45 நாட்கள்) பூஜை செய்கிறானோ அவனுக்கு தேவியின் அருள், மந்திர சக்தி உண்டாகும்.



# தீபத்திற்கு எந்த எண்ணெய் விட்டால் என்ன பலன்



காலை 3 முதல் 5க்குள் தீபமேற்றுவது வீட்டில் சர்வ மங்கள யோகத்தை உண்டாக்கும்.

வேலை வேண்டுவோர், நல்ல கணவன் வேண்டுவோர் குடும்பசுகம், புத்திர சுகம் வேண்டுவோர், சாயங்கால வேளை தீபம் மகாலட்சுமியை வழிபட அப்பலன் அடையலாம்.

## இறைவனுக்கு உகந்த எண்ணெய்

| | |
|---|---|
| மகாலட்சுமி | - நெய் |
| நாராயணன் | - நல்லெண்ணை |
| கணபதி | - தேங்காய் எண்ணை |
| ருத்ராதி தேவதை | - இலுப்பை எண்ணை |
| தேவி | — ஐந்து வகை எண்ணைகளும் |
| சர்வ தேவதைகள் | — நல்லெண்ணை |





## முகம் ஏற்றுவதின் பலன்

| | |
|---|---|
| ஒரு முகம் ஏற்றுவது | : மத்திம பலன் |
| இரண்டு முகம் ஏற்றுவது | : குடும்ப ஒற்றுமையை பெருக்கும் |
| மூன்று முகம் ஏற்றுவது | : புத்திர சுகம் தரும் |
| நான்கு முகம் ஏற்றுவது | : பசு, பூமி இவற்றைத் தரும் |
| ஐந்து முகம் ஏற்றுவது | : செல்வத்தைப் பெருக்கும் |

மண்ணால் செய்யப்பட்ட அகல் அல்லது வெள்ளி பஞ்சலோகத்தால் செய்யப்பட்ட விளக்குகள் பூஜைக்கு மிகவும் உகந்தது.



# கம்ப்யூட்டர் கிராமம்

## 17

''டோட்டுவா?'' என்றான் ஆச்சரியத்துடன் ''ஆம்'' டோட்டுவேதான்!''

அதே கலர், அதே சைஸ் அதே வாலாட்டல். ப்ரமிளாவைப் பார்த்ததும் வாலை விஷ் விஷ் என்று ஆட்டி, காதுகளை மடக்கி, கண்களில் சந்தோஷம் காட்டியது டோட்டு.

''சாகலை டோட்டு! சாகலை! முனீஸ்வரனுக்கு வேண்டிண்டதில எனக்கு அவர் திரும்பக் கொடுத்துட்டார். உடனே முனீஸ்வரனுக்குப் பூஜை பண்ணனும்'' என்று ப்ரமிளா புளகாங்கிதத்துடன் மனோஜை கட்டிக் கொண்டு முத்தம் கொடுத்து, நாயை எடுத்து முகத்தில் தேய்த்துக் கொண்டு இன்னதென்று சொல்ல முடியாத உற்சாகத்தில் திளைத்தாள்.

''நான் பம்பாய்க்குப் போகலை முனீஸ்வரா.''

''ஏன்?''

''முனீஸ்வரன் இங்கேயே இருக்கச் சொல்லிட்டார்.''

''எப்ப?''

''ராத்திரி கனாவில வந்து சொல்லிட்டார்.''

''என்னம்மா சொல்றே? நீயும் முனீஸ்வரன் பைத்தியம் பிடிச்சு அலையறயா?''

''அப்படியெல்லாம் சொல்லாதீங்க மனோஜ், முனீஸ்வரன் கோவிச்சுப்பார்.''

''இது டோட்டு நாய்தானா? வேற ஏதாவதா?''

''டோட்டுதான்.''

''எனக்கென்னவோ காதில வெள்ளை பாட்ச் வித்தியாசமாருக்காப்பல...''

''உளறாதிங்க டோட்டுதான் இது.''

கிராமத்தில் டோட்டு திரும்பி வந்து விட்டது பரவலாகப் பேசப்பட்டு பல பேர் வந்து அந்த ஆச்சரியத்தைக் கண்ணால் பார்த்து விட்டுப் போனார்கள். ப்ரமிளா ஒவ்வொருவரிடமும் விஸ்தாரமாக முனீஸ்வரனுக்கு வேண்டிக் கொண்டதையும் அவர் அருள் புரிந்ததையும் கனாவில் வந்ததையும் விலாவாரியாகச் சொன்னாள்.

மனோஜுக்கு தினம் செல்லச் செல்லக் கடுப்பாக இருந்தது. எல்லாருக்கும் பைத்தியம் பிடிக்கிறாற்போல. இருக்கிறதிலேயே தான் ஒருத்தன்தான் இந்த முனீஸ்வரன் பிஸனஸ் இல்லாமல் இருக்கிறோம் என்று தோன்றியது. டிஸி, போலீஸ் இன்ஸ்பெக்டர் ஷண்முகம், ஏன் எஸ்பி செல்வகுமார் கூட நெற்றியில் பொட்டு வைக்க ஆரம்பித்து விட்டார்!

முனீஸ்வரன் மரத்தை வெட்டுவது என்பது இப்போது நினைத்துப் பார்க்கவே முடியாத காரியமாகப் போய் விட, அங்கே தற்கொலை நடந்து போனதற்குப் பரிகாரமாக மஞ்சள் நீரெல்லாம் தெளித்துக் கொண்டிருந்தார்கள். முனீஸ்வரன் இன்னும் 'பாப்புல'ராகி அண்டை அசலிலிருந்தெல்லாம் மக்கள் அதிகம் வர ஆரம்பித்து விட்டார்கள். எல்லோரும் போகும் போது இவன் மனைவியையும் பார்த்து விட்டு நாயையும் வியப்பாகப் பார்த்து விட்டுத்தான் போனார்கள். முனீஸ்வரன் உயிர்ப்பித்த நாய் என்று இப்போதே பேச்சு துவங்கி விட்டது.

மறுதினம் அவன் உஜாகர் சிங்கைச் சந்தித்த போது, அவன் க்ரேன் ஆப்பரேட்டருடன் ஒத்துழைத்து, அன்டென்னாவை பெடஸ்டல் போட்டு ஏற்றி விட்டார்கள். முழுவதும் மேலேற்றி விட்டார்கள். ரிஃப்ளெக்டர் எல்லாம் அசெம்பிள் பண்ணும் தீவிரத்தில் ப்ரமிளாவை மறந்தே விட்டிருந்தான். சாயங்காலம் போன போது டிஸி வீட்டில் கூட்டமாக இருக்க, ப்ரமிளா வராந்தாவில் உட்கார்ந்திருக்க, பல பேர் அவள் முன் பலவிதமான பழங்கள், வெற்றிலை பாக்கு எல்லாம் வைத்து, ஒரு சிறுமி

சுஜாதா

அவளைக் காலைத் தொட்டுக் கும்பிட்ட போதுதான் ''ப்ரமிளா என்ன இது நான்சென்ஸ்!''

''ஷ்ஷ் அவங்க இப்போ உங்க மனைவி இல்லைங்க.''

''பின்னே?''

''முனீஸ்வரன் வந்திருக்காருங்க....''

ப்ரமிளா மௌனமாக இருந்தாள். கண்கள் மூடியிருந்தன தியானத்தில் போல.

''முனீஸ்வரன் இவங்க மேல வரப் போறதாச் சொல்லியிருக்காங்க.''

''என்ன உளறல் இது? என்ன உளறல்! ஷி இஸ் மை ஒய்ப்!''

''இப்ப இல்லைங்கறேன்'' என்றாள் நித்யா.



''மனோஜ் கொஞ்ச நேரம் சும்மா இருங்க. முனீஸ்வரன் மலை ஏறினப்புறம் அவ கூட பேசலாம்.''

''திஸ் ப்ளேஸ் இஸ் நட்ஸ்! பாங்க்கர்ஸ் ஐ ஸே!''

ப்ரமிளா அவள் மேல் படிந்திருந்த 'சாமி' விலகி சாதாரண ப்ரமிளா ஆவதற்கு ராத்திரி எட்டு மணியானது.

இரவு படுத்துக் கொண்ட போது ''ப்ரமிளா என்ன இதெல்லாம்!''

''என்ன?''

''நிசமாகவே சாமி வருகிறதா, உன் மேல்?''



''வம்படிப்பதிலும் ஒரு ஒழுங்கைக் கடைபிடிப்பவ என் மனைவி...''

''எப்படிச் சொல்றே?''

''வம்படிக்க ஆரம்பிக்கும் போது... கடவுள் வாழ்த்தும்... முடிக்கும் போது தேசிய கீதமும் கண்டிப்பா பாடிடுவா!''

- ராஜிராதா

---

''அதென்னவோ மனோஜ் எனக்குச் சொல்லத் தெரியவில்லை. ஆனால் அந்தச் சமயத்தில் என்ன நடக்கிறது என்று எனக்கு நினைவே இல்லை. என்னவோ உடம் பெல்லாம் உருவி விட்டது போலத்தான் இருக்கிறது. பசியே இல்லை. ஜோதி தெரிகிறது.''

''ஸ்டாப் இட்!'' என்றான்.

''என்ன மனோஜ்?'' என்றாள் பயத்துடன்.

''ப்ரமிளா நீ பண்ணுவது ஏமாற்றுக் காரியம். இதெல்லாம் இல்லை! சாமியாவது பூதமாவது எல்லாம் ஆசாமிதான். முனீஸ்வரனும் இல்லை. மண்ணாங்கட்டியும் இல்லை.''

அவன் வாயைப் பொத்தினாள். 'அப்படியெல்லாம் பேசக் கூடாது'' என்றாள் குழந்தை போல.

''உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளும்போதே எண்ணினேன். இது தேறாத கேஸ். கொஞ்சம் மரை கழன்ற குடும்பத்திலிருந்து வந்த பொண்ணு என்று நான் நினைத்தது நிசமாகி விட்டது. ப்ரமி கம் ஆஃப் இட்!''

''இல்லை மனோஜ். நிஜமாகவே முனீஸ்வரன் என் கனவில் வந்து என்ன என்னவோ சொல்கிறார்.''

''ஆல்ரைட் நேத்து கனவில என்ன சொன்னார்?''

''இங்கிருந்து எட்டு மைல் தூரத்தில விறாலிக்குறிச்சி என்ற கிராமத்தில் ஒரு குளம் இருக்கிறதாம். அந்தக் குளத்தின் மத்தியில் ஒரு தாமரை மண்டபம் இருக்காம். அந்த மண்டபத்தில நடுவில தோண்டினா முனீஸ்வரன் சிலை கிடைக்குமாம். இது தினம் கனாவில சொல்லிண்டே இருக்கார் மனோஜ்!''

மனோஜ் கொஞ்சம் பயத்துடன் சிரித்தான். ''ப்ரமிளா ஆர் யு ஆல் ரைட்?''

''ஐ'ம் ஆல் ரைட். ஏன்?''

''முனீஸ்வரன் கனாவில வந்து மண்டபத்தில - அது என்ன தாமரைப் பூவா?''

''நடுவில சிலை புதச்சிருக்குன்னு அதைப் ப்ரதிஷ்டை பண்ணச் சொன்னார்!''

''சரி போய்ப் படுத்துக்க.''

''மனோஜ் நான் சொல்றதில நம்பிக்கை இல்லதானே உனக்கு?'' என்று கெஞ்சினாள்.

''இல்லை நம்பறேன்.''

''கேலிதானே பண்றே?''

''இல்லை நிஜம்.''

''சிரிக்கிறியே கண்ணால.''

''சிரிக்கலை, அழறேன்.''

''மனோஜ் எனக்குப் பைத்தியம்னு சொல்லாதே?'' என்றாள் கேள்வி கேட்கிற தோரணையில்.

''இந்த மாதிரி விபூதி போட்டு இன்னும் பாயைப் ப்ராண்டு! பைத்தியம்னு சொல்லலை.''

''டோட்டு உயிரோட வரல்லையா?''

''இது டோட்டு இல்லை. டோட்டு மாதிரி ஒரு நாய்.''

''டோட்டுதான் இது. எப்படி என்னைத் தேடிண்டு வருமாம் இது.''

''என்னவோ குழப்பமா இருக்குது. எப்படின்னு புரியலை. ஏதாவது விளக்கம் இருந்துதான் ஆகணும். நாம டோட்டு எப்படி இருக்கும்னு மறந்து போய்ட்டம். டோட்டு மாதிரி ஒரு நாய் வரவே அது தான்னு அதை ஸ்வீகரிச்சண்டாச்சு.''

''மனோஜ் எனக்குப் பைத்தியம்னு மட்டும் சொல்லாதே என்ன?''

''சொல்லலை நீ பேசாம வீட்டுக்குள்ள இரு. வெளியே போனா தகராறு. யாராவது வீதில விழுந்து சேவிக்க ஆரம்பிச்சுடுவாங்க. என்ன கிராமம்பா இது! என்ன மூடநம்பிக்கை இவங்களுக்கு. ஸாடிலைட் கம்யுனிகேஷன் நாய்ஸ் ஃபிகர்னு என்ன ஒரு அபத்தம்!''

மனோஜுக்குச் சிரிப்பதா அழுவதா தெரியவில்லை. ஆனால் தன் பெண்டாட்டிக்கு முனீஸ்வரன் பைத்தியம் முற்றுவதற்குள் அவளை வெளிநடத்த வேண்டும் என்று எச்சரிக்கை தோன்றி விட்டது. 'இன்னும் கொஞ்ச நாள் இந்தக் கிராமத்தில் இருந்தால், என்னையும் பைத்தியம் பண்ணி விடுவார்கள். நானும் காதில பூ செருகி, முனீஸ்வரன் பண்ண ஆரம்பித்து விடுவேன்...!' என்கிற பயம் வந்து விட்டது.

இன்ஸ்பெக்டர் ஷண்முகத்திடம் ஷண்பேகர் பற்றி ஏதாவது தகவல் கிடைத்ததா என்று கேட்டுப் பார்த்தான்.

இல்லை.

ஷண்பேகர் எங்கே போனான் என்பதும் வினோதமாக இருந்தது. இதனிடை உஜாகர்சிங் வேறு குழப்பி விட்டான்.

**ஸா**டிலைட்டுக்கு எர்த் கனெக்ஷன் கொடுப்பதற்குக் கரியும் உப்பும் கொண்டு வர உஜாகர் போயிருந்தான். ஆரம்பாக்கம் மார்க்கெட்டில் உப்பு கிடைத்தும், கரித்

துள் நடேச பண்டிதர் வீட்டில் இருப்பதாக யாரோ சொல்லப் போய், இரண்டு சர்தார் ஜிகளும் பண்டிதர் இல்லாத போது அவர் வீட்டுக்குப் போய், பின்கட்டில் கரி இருக்கிறதா என்று ஓடுவேய்ந்த ஷெட்டில் பார்க்க, அலறிக் கொண்டு ஓடி வந்தார்கள். என்ன சமாசாரம் என்று கேட்டால், சரியாகச் சொல்ல முடியாமல் தவித்தனர். இருவரும், 'ஸாப்! வஹான் வஹான்' என்பதைத் தவிர வேறு என்ன என்று சொல்ல மாட்டேன் என்கிறார்கள்.

இன்ஸ்பெக்டர் ஷண்முகத்தை அழைத்துச் சென்று, அங்கே போய்ப் பார்த்ததில் ஓடு வேய்ந்த அந்தப் பகுதியில் கரி மூட்டை கவிழ்ந்து கிடந்தது. அதில் கரி கொட்டி அவிழ்ந்திருந்தது.

''என்ன உஜாகர்?''

''பாருங்கள் சரியாக.''

கரிமூட்டை. அது கரியென்றுதான் நினைத்துக் கொண்டிருந்தான். உஜாகர் அந்த மூட்டையைக் குலுக்க, அது கரி யில்லை. தலைமயிர்!

இன்னும் கொஞ்சம் உலுக்கியதில் அந்த உடல் வெளிப்பட்டது. அந்த ஆள் சட்டை போட்டிருந்ததும் அவன் பாக்கெட்டில் நோட்டுப் புத்தகமும் தெரிந்தது. அவன் பல் வரிசை பொருந்தாமல் கோண வாயிலிருந்து ரத்தம் வெளியே வந்து, கறுப்பாக உறைந்திருந்தது.

மனோஜுக்கு ரத்தம் சில்லிட்டது.

அனைத்தையும் விட்டு பம்பாயைப் பார்க்கப் போய்ச் சேர வேண்டும் என்கிற கவலை வயிற்றைப் பிசைந்தது.

ஷண்முகம் ''யாருப்பா இது?'' என்றார்.

''இதாருங்க? நம்மூர்க்காரன் இல்லைங்க, பக்கத்து ஊர் போல இருக்குது. ரொம்ப கறுப்பா இருக்கானுங்க.''

''கரித்தானுங்க!''

''குளிப்பாட்டிரலாமா? பாத்தா நம்ம புலி வேசக்காரன் மாதிரில்லை?''

''கணேசனா?''

''ஆமாங்க அவனைப் போலத்தான் அசப்பில தெரியுது.''

''இல்லைப்பா வேத்தாளு மாதிரி தெரியுது. கணேசனை யாரோ இருவிழா வில பார்த்ததாச் சொன்னாக.''

''பின்ன யாரு இது?''

''இவன் நம்ம அய்யா சைட்டில காவல் பார்த்தவங்க. பேரு மாணிக்கம். எனக்கு நல்லாத் தெரியும்.''

''யாராவது பிடிங்க...''

அந்த உடலின் கையில் ஒரு காகிதம் இருந்தது.

(தொடரும்)



தயாரிப்பாளர் : ''மேடம்! இந்தப் படத்தோட கதை வந்து....!''

நடிகை : ''நோ... நோ.... நீங்க கதையெல்லாம் சொல்ல வேண்டாம். 'விவாகரத்து'ங்கற டைட்டிலே எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. நான் அவசியம் நடிச்சுத்தரேன்!''

- வேதபுரி எஸ். ரமேஷ்



''அடிக்கடி கெட்ட கனா வந்து பயமுறுத்துது டாக்டர்!''

''அப்படி என்னய்யா பெரிய கெட்ட கனா?''

''விலைவாசியெல்லாம் குறையறாப் போல.... வருதே, போதாதா!''

- இரா. மோகன்தாஸ்

❑ சோவியத் யூனியனில் கம்யூனிஸம் தோற்றாலும் தோற்றது, எங்கும் எதிலும் மாறுதல்!

அறுபத்தேழு வருடங்களாக லெனின்கிராட் என்று அழைக்கப்பட்டு வந்த நகரம் இன்று மீண்டும் செயின்ட் பீட்டர்ஸ்பர்க்.

கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களின் பெயர்களைக் கொண்டிருந்த தெருக்கள், பொது இடங்கள் ஆகியவற்றின் பெயர்களும் மாற்றப்பட்டு விட்டன.

முன்பு இருந்த விடுமுறைக்குப் பதிலாகப் புதிய நாள் ஒன்றை விடுமுறையாக அறிவித்திருக்கிறார்கள்.

வார இதழ் ஒன்று இப்போது 'சோவியத் யூனியன்' என்ற பெயருக்குப் பதிலாகப் புதிய பெயர்களைச் சொல்லுமாறு தன் வாசகர்களைக் கேட்டுக் கொண்டு இருக்கிறது!

- எக்ஸ்பிரஸிலிருந்து
- சேலம் சக்திக்கொடி



**டைரக்டர்கள் எஸ்.பி. முத்துராமன், மகேந்திரன், ஆகியோருடன் நிகழ்த்திய உரையாடலின் தொகுப்பு :**

கல்கி : ஒரு பிரும்மாண்டமான தயாரிப்பு, இரண்டு சூப்பர் ஸ்டார்கள் இணைந்து நடிக்கும் படம், குறைவான வசனங்கள், நிறைவான இசை, வித்தியாசமான படப்பிடிப்பு அணுகுமுறை.... இப்படி எத்தனையோ சிறப்புக்கள். என்றாலும், இவை எல்லாமே போலீஸ்காரர்கள் செய்ய வேண்டிய வேலையைப் பொது மக்களும் செய்யலாம் என்று நியாயப்படுத்துவதற்காகப் பயன்படுத்தப்பட்டிருப்பதைப் போலத் தோன்றுகிறது. தட்டிக் கேட்பதற்கென்று சிலர் இருக்கும் போது, அவர்களைப் பயன்படுத்திக் கொள்ளாமல் பொது மக்களே ஈடுபட்டால் அது அராஜகத்துக்கு வழிகோலுமில்லையா!



முத்துராமன்

மகே : பொதுவாக மக்களுடைய மனப்போக்கே, 'நமக்கேன் வம்பு' என்று ஒதுங்கியிருப்பதுதான். தெருவில் ஒருவன் தன் மனைவியை அடித்துக் கொண்டிருந்தால், வேடிக்கை பார்ப்பார்களே தவிர விலக்கி விட மாட்டார்கள். இந்த 'நமக்கேன் வம்பு' என்கிற மெண்டாலிடியின் காரணமாகப் பல பிரச்னைகளில் பொது மக்கள் கேள்வி எதுவும் கேட்பதே இல்லை. அந்தக் கேள்வி கேட்கும் உணர்வைத் தூண்டிவிடுவதற்காக....

கல்கி : கேள்வி கேட்பதற்கும் சட்டம் ஒழுங்கை நம் கையிலேயே எடுத்துக் கொள்வதற்கும் வித்தியாசம் இருக்கிறது.

மகே : உண்மைதான். ஆனால் சிந்தித்துச் செயலாற்றும் சிலர் கேள்வி கேட்பதால் நியாயம் பிறப்பதில்லையே! 'நீ என்ன வேணும்னாலும் கேட்டுட்டுப் போ நான் இப்படியேதான் நடந்துக்குவேன்' என்கிறது அதர்மம். அதனால் அடுத்த கட்டமாக என்ன நிகழும் என்பதைத்தான் இதுபோன்ற படங்கள் எடுத்துக் கூறி எச்சரிப்பதாகக் கொள்ளலாம். தட்டிக் கேட்க வேண்டியவர்களே கூட தவறிழைக்கும் போது, அதர்மமாக நடக்கும் போது - வேறு என்ன செய்வது? ஆக இதுபோன்ற படங்களை இன்று மக்கள் வரவேற்கிறார்கள் என்றால் இன்றையச் சூழ்நிலையில் அவர்கள் அத்தனை வெறுத்துப் போயிருக்கிறார்கள் என்று அர்த்தம். அதைச் சரி பண்ண வேண்டும்.



மகேந்திரன்

முத்து : படங்களில் வன்முறை என்பது சமீப காலமாகத்தான் அதிகரித்திருக்கிறது.



அதற்குக் காரணமாக நான் கருதுவது தெலுங்குப் படங்களின் பாதிப்பு அதிகரித்திருப்பதுதான். அடிதடி, ரத்தம் இவற்றையெல்லாம் பார்ப்பதற்கு ரசிகர்களை இந்த டப்பிங் படங்கள் பழக்கப் படுத்திவிட்டன. இந்தப் பாதிப்பினால்தான் படங்களில் இப்படிப்பட்ட காட்சிகள் இடம்பெறும் சூழ்நிலை உருவாகிவிட்டது. நியாயத்தை நிலைநிறுத்தத் தவறு செய்தவர்களை இப்படித் தண்டிப்பதை ரசிகர்கள் வரவேற்கும்போது அதை நாம் ஏற்கத்தான் வேண்டும். இதை சட்டம், ஒழுங்கு என்கிற கண்ணோட்டத்தில் பார்க்கக்கூடாது. அதர்மத்தைத் தர்மம் அழிக்கிறது என்றுதான் எடுத்துக் கொள்ள வேண்டும். ரஜினியோ, மம்முட்டியோ படத்தில் அதைச் செய்யும்போது அதை அந்தக் கதாபாத்திரங்கள் செய்வதாக எடுத்துக் கொள்ளாமல் அதர்மத்தை எதிர்த்துத் தர்மம் போராடுவதாகத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும். டைரக்டர் மணிரத்னம் அதைத்தான் வலியுறுத்துகிறார் என்று கருதுகிறேன்.

கல்கி : அப்படியே எடுத்துக் கொண்டாலும் கூட, இவ்வளவு அடிதடி, கொலைகள் எல்லாம் செய்த ஒருவரை, கடைசியில் அவர் கலெக்டரின் மூத்த சகோதரர் என்பது தெரிந்தவுடன் அந்தப் போலீஸ் அதிகாரி 'போதிய சாட்சியமில்லை. எனவே கைது செய்ய முடியாது' என்று கலெக்டரிடமே சொல்லிவிட்டுப் போவது எந்த வகையில் நியாயம்?

முத்து : அது கதாநாயகனுக்கு இருக்கும் இமேஜ். ரஜினிகாந்த் நடித்த பல படங்களின் டைரக்டர் என்கிற முறையில் நான் சொல்கிறேன். அந்த இடத்தில் ரஜினிகாந்தைக் கைது செய்து கொண்டுபோனால் ரசிகர்கள் அதை ஏற்க மாட்டார்கள். அப்படி ஏற்காமல் போய்விட்டால், இத்தனை கோடி ரூபாய் செலவழித்துச் செய்த அந்தப் படத்தின் வெற்றி - தோல்வியை அது பாதித்துவிடும். அதற்காக அது ஒரு எக்ஸ்க்யூஸ். அவ்வளவுதான். அது சரியா, தப்பா என்று விவாதித்தால் உங்கள் முடிவுக்கு வரலாம். ஆனால் இமேஜ் உள்ள ஒரு நடிகரை வைத்துப் படமெடுக்கும்போது சில விஷயங்களில் விட்டுக் கொடுக்கத்தான் வேண்டும்.

மகே : அது ரொம்ப கரெக்ட். ரஜினியை ரசிகர்கள் ரஜினியாகத்தான் பார்ப்பார்களே தவிர, அந்தக் கேரக்டராகப் பார்க்க மாட்டார்கள். கடைசியாக உள்ள ஒரு காட்சியை மட்டும் சொல்கிறீர்கள். ஆரம்பத்திலிருந்தே பல இடங்களில் டைரக்டரின் தைரியத்தைப் பார்க்க வேண்டும். இவ்வளவு இமேஜ் உள்ள ஒரு ஹீரோவைப் போலீஸ்காரர்கள் தலைகீழாகத் தொங்க விட்டு அடிப்பார்கள் - உதைப்பார்கள். இதையெல்லாம் காண்பித்திருக்கிற டைரக்டரின் துணிச்சலைப் பாராட்ட வேண்டும். படத்தில் உள்ள இரண்டு பேருமே சூப்பர் ஸ்டார்கள். இரண்டு பேருமே அடி வாங்குகிறார்கள் என்னும் போது... அந்த இடத்தில் டைரக்டர் அவர்களை சூப்பர் ஸ்டார்களாகப் பார்க்கவில்லை. மனிதர்களாகப் பார்த்திருக்கிறார். அது ரொம்பவும் துணிச்சலான செயல். இது ஒரு திருப்பு முனையாகக் கூட அமையலாம். இப்படியெல்லாம் செய்துவிட்டுக் கடைசியில் இப்படிச் செய்திருப்பது ரசிகர்களுக்காகச் செய்யப்பட்ட காம்ப்ரமைஸ்... கதைக்காகவும் ரசிகர்களுக்காகவும், தர்மத்துக்காக நடந்த போராட்டத்தை நியாயப் படுத்த வேண்டும் என்பதற்காகவும் செய்யப்பட்ட காம்ப்ரமைஸாக இருக்கலாம். அதைப் பெரிதுபடுத்தக் கூடாது.

கல்கி : அடிப்படை காண்ட்ரவர்சியைப் பற்றிப் பேசியாகிவிட்டது. டெக்னிகலாக உள்ள விஷயங்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? ஷோபனா தன்னுடைய காதலை வெளியிட்டு, ரஜினி அதை ஏற்பதைப் புரிந்து கொண்டபின் ஒரு கனவுக் காட்சி வருகிறது. அதில் ரஜினி ஒரு ஜப்பானிய வீரனின் வேடத்தில். அதனுடைய உள்ளர்த்தமோ அல்லது அதில் என்ன சொல்ல விரும்புகிறார்கள் என்பதோ புரியவில்லை. அடுத்தது, அந்தக் காட்சியே இல்லாமல் இருந்திருந்தால் கதையின் விறுவிறுப்பு தடைப்படாமல் இருந்திருக்குமோ என்று தோன்றுகிறது.

மகே : பொதுவாக, கனவுக் காட்சிகள் அந்த இரண்டு பாத்திரங்களினிடையே உள்ள நெருக்கத்தைக் காண்பிப்பதற்காகவே வைக்கப்படுகிறவை. வழக்கமானதாக இல்லாமல் வித்தியாசமாகக் காண்பிக்க வேண்டும் என்பதற்காக அப்படிச் செய்திருக்கிறார். அது



அவருடைய யுக்தி; கற்பனை.

கல்கி : அது சரி. அந்தப் போர்க் காட்சியினுடைய பர்ப்பஸ் என்ன?

மகே : ஒரு விஷுவல் ப்யூட்டிக்காக அதைக் கையாண்டிருக்கலாம்.

முத்து : டைரக்டர் மணிரத்தினம் அன்யூஷுவலாக இருக்க வேண்டும் என்பதற்காகவே சில விஷயங்கள் செய்வார். ஃபார்முலா, கமர்ஷியல் ட்ரீட்மெண்ட் இதெல்லாம் இல்லாமல் வரவேண்டும் என்கிற எண்ணம் அவருக்கு உண்டு. பிரும்மாண்டமான ஒரு காட்சி அமைக்க வேண்டும் என்பதற்காகவும் செய்திருக்கலாம்.

கல்கி : மகாபாரதம் அவரை மிகவும் பாதித்திருக்கிறதோ என்று தோன்றுகிறது.

முத்து : அதில் சந்தேகமேயில்லை. குருக்ஷேத்திரப் போர் என்பதே தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் இடையில் நடப்பதுதானே!

மகே : என்னைப் பொறுத்தவரைக்கும் ஒரு டெக்னிஷியனாகப் படத்தைப் பார்க்கவில்லை. ஒரு ரசிகனாகத்தான் பார்த்தேன். ஏன், எதற்கு என்கிற கேள்விக்கெல்லாம் இடமில்லாமல், யோசிக்க அனுமதிக்காமல் விறுவிறுவென்று அந்தப் பாடல் காட்சி ஓடிவிட்டது. உங்கள் கேள்வியை ஒரு குற்றச்சாட்டாகவே நான் எடுத்துக் கொள்ளவில்லை. உங்களை டைரக்டர் சிந்திக்க வைத்திருக்கிறார் என்பதுதான் அதற்கு அர்த்தம். அதுவே பெரிய வெற்றி.

முத்து : ஸ்ரீவித்யா பாத்திரத்தை எடுத்துக் கொள்வோம். பதின்மூன்று வயதில் ஒரு பெண்ணுக்குக் குழந்தை பிறக்கிறது. அந்தக் குழந்தையை கூட்ஸ் ரயிலில் விட்டு விட்டு அந்தப் பெண் போய் விடுகிறாள். முப்பத்திரண்டு வருடங்களுக்குப் பிறகு படத்தில் வரும் ஸ்ரீவித்யாதான் அந்த இளம் பெண் என்று வசனத்தின் மூலம் தெரிய வருகிறது. முந்தைய காட்சியில் ஸ்ரீவித்யாவையே இளம் பெண் வேடத்தில் காண்பிக்காமல் வேறு யாரையோ போட்டிருப்பது ஒரு புது முயற்சி. இதுவரை யாருமே அப்படிச் செய்ததில்லை. ரசிகர்கள் அதை ஒப்புக் கொள்கிறார்கள் என்பது தெரிந்து விட்டது. இனி மற்றவர்கள் தைரியமாக அப்படிச் செய்ய முடியும்.

கல்கி : இதெல்லாம் விடச் சிறப்பாகச் சொல்ல வேண்டிய ஒரு விஷயம் - ஜெய்சங்கரின் பாத்திரப்படைப்பு. ஒரு அண்டர் ஸ்டாண்டிங் ஹஸ்பண்ட். மறக்க முடியாத கேரக்டர்.

முத்து : ரொம்பவும் அடக்கி சூப்பராகச் செய்திருக்கிறார்.

கல்கி : இன்னொன்று. தாயும் மகனும் (ஜெய்) கோயிலில் சந்தித்துக் கொள்ளும் நிகழ்ச்சி. மனத்தை அப்படியே உருக்கிவிடும் காட்சி அது.

முத்து : அதே போல, ரஜினி - மம்முட்டி இருவருடைய நட்பின் ஆழத்தை விளக்கும் காட்சிகள், அவற்றில் அவர்களுடைய பெர்ஃபார்மன்ஸ் இவற்றையும் குறிப்பிட வேண்டும்.

கல்கி : உண்மைதான். உதாரணத்துக்கு, மம்முட்டியின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு ரஜினி பானுப்ரியாவின் நெற்றியில் குங்குமம் இடுவது, விரோதியான கலெக்டர் ரஜினியின் தம்பி என்று தெரிந்ததும் மம்முட்டி, 'உன் குடும்பம் என் குடும்பம்' என்று கூறுவது. ஆக, இரண்டு கேரக்டர்களும் மிக அழகாக பாலன்ஸ் ஆகிவிடுகிறது.

முத்து : இளையராஜாவின் பின்னணி இசை ஒரு முக்கிய அம்சம். சம்பவங்கள் மனத்தைத் தொடுவதற்கு முக்கிய காரணம். ஒளிப்பதிவு, நடன மூவ்மெண்ட்ஸ், எடிட்டிங் எல்லாமே தனித்தனியாகக் குறிப்பிட்டுச் சொல்லும்படி அமைந்திருக்கின்றன.

கல்கி : அதர்மத்தைத் தர்மம் வெல்லும் சூழ்நிலை நாட்டில் இல்லாவிட்டாலும் திரைப்படத்திலாவது அமைந்திருக்கிறதே!

- சி. ஆர். கே
படங்கள் : உத்ரா



''என்னங்க எப்போதும் ஆபீஸ் ஞாபகமாவே இருக்கிறது நல்லால்லே.''

''ஏன், இப்ப என்ன நடந்து போச்சு?''

''ப்ராக்ரஸ் ரிப்போர்ட்ல கையெ முத்துப் போடக் கூட நம்ம பையனிடம் 'சம்திங்' கேட்டீங்களாமே!''

- பி. துரைராஜ்

# குறும்பு கொப்பளிக்கிறது!

◆ ஐம்பது ஆண்டுகளுக்கு முன் கோர யுத்தத்தில் இருந்து நம் நாட்டைக் காக்க 'மக்கள் சக்தி'யே போதும் என நவ. 16, 1941 தேதிய கல்கி தலையங்கம் நம்பிக் கூறுகிறது. நவ. 10, 1991 தேதிய கல்கி தலையங்கமோ நம் தேசத் தலைவர்களிடமிருந்தே நம் தேசத்தைக் காப்பாற்ற 'மக்கள் சக்தி'யைக் கூட நம்பாமல் 'இறைவா... நாட்டைக் காப்பாற்று' எனப் பிரார்த்தனை செய்கிறது. இந்த ஐம்பது ஆண்டுகளில் நம் நாடும், நம் மக்கள் சக்தியும் தேசத் தலைவர்களின் தராதரமும் எந்த அளவுக்குத் தாழ்ந்துள்ளன என்பதையே இவ்விரு தலையங்கங்களுக்கிடையே உள்ள வேறுபாடு உணர்த்துகிறது.

கோவை, கே. ஆர். விஜயா.

◆ குடிசைத் தொழிலாக, சாதாரண மக்களால், நடத்தப்பட்டு வரும் ஊதுபத்தி தயாரிப்பின் சிறப்பையும், தயாரிப்பு முறைகளையும், மிகத் தெளிவாகக் கட்டுரை விளக்கியது!

கும்பகோணம், எஸ். கே. மூர்த்தி.

◆ தலையங்கத்தில் தமிழக பஸ் கட்டண உயர்வை எதிர்த்துப் போராட்டம் நடத்தியவர்களையும் சாடியிருக்கிறீர்கள். தமிழக அரசின் பஸ் கட்டண உயர்வை, அரசு எவ்வளவு நியாயப்படுத்தினாலும் கட்டண உயர்வுகள் மிக அதிகமே.

கெங்கவல்லி, பூங்குழலி.

*(பஸ் கட்டண உயர்வு மிக அதிகம் என்பதில் கருத்து மாறுபாடு இல்லை. அதை எதிர்த்துப் போராடுவது எப்படி என்பது குறித்துத்தான் முறையாகச் சிந்திக்கச் சொல்கிறது தலையங்கம். - ஆர்.)*

◆ ஜெயலலிதா நியாய விலைக் கடைமுன் கருணாநிதியின் அறப் போராட்டம் - கருத்துப் படத்தில், கலைஞர் கையில் உள்ள கோரிக்கை அட்டையில் உள்ள ''ஓட்டுக்களையும் ரேஷன் செய்து கொடு'' என்ற வாசகத்தில் கொப்பளிக்கிறது கல்கியின் குறும்பு.

திருக்குவளை, பத்மா வெற்றி.

◆ நமது வீரர்கள் போதிய வெளிச்சமில்லாத போதிலும் சவாலுடன் வீரமாக விளையாடி நான்கே ரன்னில் தோற்றனர். அவர்களின் வீரத்தை மெச்சாமல் ரூல்ஸ் தெரியவில்லை என்று கூறியிருக்கிறாரே தராசு?

சித்தார், காயத்ரி.

◆ மந்திரி சபையிலிருந்து ஓர் அமைச்சரை நீக்கவும், மற்றொரு புதிய அமைச்சரைச் சேர்க்கவும் முதல்வருக்கு அதிகாரம் உண்டு என்பதை யாரும் மறுப்பதற்கில்லை. ஆனால் நீக்கியது குறித்து முதல்வரோ, அல்லது நீக்கப்பட்ட அந்த அமைச்சரோ இதுவரை வாய் திறந்து ஒரு அறிக்கை கூட விடாமல் இருப்பது அரசியல் கேலிக் கூத்தாகும்! மக்கள் உரிமையை அவமதிப்பதாகும்.

சிதம்பரம், எஸ். ஆர். பாஸ்கரன்.

◆ ஊதுபத்தி பற்றிய செய்தி கண்டேன். பெரும்பாலான ஊதுபத்தி பாக்கெட்டுகளில் தயாரிப்புத் தேதியும், விற்க வேண்டிய விலையும் குறிப்பிடப்பட்டிருக்காது. இன்னும் சில பாக்கெட்டுகளின் வெளியே 9 ஸ்டிக்ஸ் என்று அச்சிடப்பட்டிருக்கும். உள்ளே ஏழோ, எட்டோ பத்திகள் தான் இருக்கும். மற்ற தொழில்களுக்கு ஒரு முறையான ஒழுங்கு ஏற்படுத்தியிருப்பது போல் பத்தி தொழிலுக்கும் ஏற்படுத்துவது நலம்.

திருவட்டார், தா. சிந்து குமார்.

◆ கல்கி 10.11.91 இதழில் 26ம் பக்கம் வந்துள்ள ஜோக் படத்தில், கார்ட்டூனிஸ்ட், பஸ் பிரயாணிக்கு மோதிரத்தையும் கடிகாரத்தையும் போட மறந்து விட்டாரே!

சென்னை, எம். மாலினி.

◆ பொன் விழா போட்டிக்கு வந்த நாடகங்களில் மிகச் சிறந்த இரண்டைத் தேர்ந்தெடுத்து வெளியிட்டதற்கு என் பாராட்டுக்கள்.

மேல் நாட்டில் பிரபலமாகியிருக்கும் Expressionist technique களையும், இதர உத்திகளையும் கலைநயத்துடன் கையாண்டிருக்கிறார்கள் இரண்டு நாடகாசிரியர்களும். நாடகங்களின் நையாண்டிப் பின்னணியையும், அதில் இழைந்தோடும் துக்கத்தையும் கையாண்டிருக்கும் முறையை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

சென்னை, ஜி. எஸ். பாலகிருஷ்ணன்.

◆ கள்ளச் சாராயமானது கிராமப் புறங்களில் பெரும்பாலும் ''சர்க்கரை'' கழிவுப் பாகிலிருந்தே தயாரிக்கப்படுகிறது. வெல்லத் தயாரிப்பில் உருவாகும் இந்தக் கழிவுப் பாகு விற்பனையைத் தமிழக அரசு கட்டுப்பாட்டுக்குள் கொணர்ந்தால் நிச்சயம் கள்ளச் சாராயம் குறையும்.

மருந்து என்ற பெயரில் அரிஷ்டம், இஞ்சிச் சாறு போன்றவைகள் பகிரங்கமாக விற்கப்படுகின்றன. இதில் குளோரோஃபாரம் போன்றவை சேர்த்து போதைப் பொருளாகப் பயன்படுத்தப்படுகிறது.

மாடம்பிள்ளைதர்மம், ஐ. எஸ். வாசு.

◆ இவ்வாரக் கல்கியில் சுப்ரபாரதிமணியன் எழுதிய 'எல்லோருக்குமான தேசம்' சிறுகதை படித்தேன்; பிரமித்தேன். சரியான கரு. கட்டுக்கோப்பாக எழுதப்பட்டிருக்கிறது. நவீன சிறுகதை இலக்கணப்படி, கதை அப்போதே துவங்கி, அப்படியே முடிகிறது. அநாவசிய வளர்த்தல் இல்லை. சட்டென்று விஷயத்திற்கு வந்து விடுகிறார் கதாசிரியர். முடிவும் மனத்தில் ஒரு நெருடல் ஏற்படுத்துகிறது. மனமார்ந்த பாராட்டுகள்.

சென்னை - 91, ரா. கண்ணன் மகேஷ்.

# காதலென்னும் வானவில்

4

தினமும் 'டாண்' என்று வந்து விடும் எட்டரை மணி பஸ் இன்னும் வரவில்லை. கவலையுடன் கைக் கடிகாரத்தையும் தெருக்கோடியையும் மாற்றி மாற்றிப் பார்த்து மீராவுக்குச் சோர்ந்து போயிற்று. 'விர்விர்ரென்று' ஒரு ஆடம்பர வீர்யத்துடன் அவளைத் தாண்டியபடி அந்த ஹோண்டா பைக் இதோடு ஐந்து முறை சென்று விட்டது. ஹோண்டாக்காரனுடைய தைரியம் இப்படி எரிச்சல் ஊட்டுவதுடன் சரி என்று அவளுக்குத் தெரியும். விரலைக் காட்டி நிறுத்தி, 'ஓ.கே. கமான் எனக்கு லிஃப்ட் கொடு' என்றால் தலை மறைவாகி விடுவான் என்று அவளுக்கு அனுபவத்தில் தெரியும்.

மீண்டும் 'விர்'ரென்று வேகத்துடன் அவன் அவள் பக்கமே திரும்பாமல் பறந்தான். 'ரோக்' என்று அவள் தனக்குள் சபித்தாள். அந்த விநாடிப் போதில் காற்றில் பறந்த அவனது தலை மயிரும் கழுத்தில் அணிந்திருந்த கறுப்புக் கயிறும், நீல ஜீன்ஸின் மேல் அணிந்த சிவப்பு டீ ஷர்ட்டும் தெரிந்தன. பஸ் இன்னும் ஐந்து நிமிஷங்களுக்குள் வரவில்லையென்றால் விரலை அசைத்து அவனை நிறுத்துவது என்று மீரா நினைத்துக் கொண்டாள்.

பஸ் வரவில்லை. பஸ் ஸ்டாப்பில் அவளைப் போலவே பொறுமை நழுவிப் போன இரண்டு ஆண்கள் நின்றிருந்தார்கள். அவள் நடுத் தெருவுக்குச் சென்று இடது கையை நீட்டித் தொலைவில் வந்த பைக்கைப் பார்த்துக் கட்டை விரலை நிமிர்த்தி நின்றாள். மெள்ள மெள்ள வண்டி அருகில் நின்ற போது, அவள் நினைத்ததை விட அந்த முகம் அசடாக இருந்ததைப் போல் தோன்றிற்று. அவள் பேசுவதற்காக அவன் ஆர்வத்துடன் காத்திருந்தான். அவள் எந்த உணர்ச்சியையும் காண்பிக்காமல், ''இதப் பார், உன்னுடைய நம்பரை நோட் பண்ணிக்கிட்டிருக்கேன். மறுபடி இப்படிக் காதைக் கிழிக்கிற மாதிரி இந்தப் பக்கம் போனே, போலீசுக்கு ரிப்போர்ட் பண்ணுவேன் பப்ளிக் நியூஸென்ஸுன்னு!'' என்று விட்டு மீண்டும் ஸ்டாப்புக்கு வந்தாள்.

அவன் ஏதோ அடிக்குரலில் சபித்தபடி கிளம்பிப் போனதை அவள் கண்டு கொள்ளாமல் நின்றாள். எதேச்சையாக நிமிர்ந்த போது பஸ் ஸ்டாப்பில் நின்ற இரு ஆண்கள் அவளைப் பார்த்துச் சபாஷ் என்பது போல் புன்சிரிப்பு காண்பித்தார்கள்.

அவர்கள் ஏதும் பேச ஆரம்பிக்கு முன் நல்ல வேளையாக பஸ் வந்தது. அவள் ஜன்னல் ஓரமாக இருந்த காலி இடத்தில் அமர்ந்து கொண்டாள்.

பல்லவன் பஸ்ஸில் பள்ளிக்குச் சென்று வருவது அவளுக்கும் மஹேஷுக்கும் இப்போது பழகி விட்டது. இந்தியாவில், அமெரிக்காவில் வைத்துக் கொண்டது போல், இரண்டு கார்கள் வைத்துக் கொள்ள முடியாது என்று அப்பா தெளிவாக்கியிருந்தார். இப்பொழுது அங்கிருந்தால் அவளுடைய உபயோகத்திற்கென்று எரிக்பேக்கர் வைத்திருப்பது போல ஒரு தனி வண்டி இருந்திருக்கும். ஆனால் இங்கு பஸ்ஸில் செல்வது ஒன்றும் தொந்திரவாக இருக்கவில்லை. பலதரப்பட்ட மனிதர்களைத் தினம் சந்திப்பதும் பொது இடம் என்ற கூச்சமில்லாமல் சளசளவென்று அவர்கள் அந்தரங்கமான விஷயங்களை உரத்துப் பேசுவது காதில் விழுவதும் சுவாரஸ்யமான விஷயங்கள். எத்தனை பேசுகிறார்கள் என்று முதலில் பிரமிப்பு ஏற்பட்டது. இப்போது பேச்சு சப்தம் கேட்காவிட்டால் விநோதமாக இருக்கிறது. அந்த சப்தத்திலேயே படிக்கும் வழக்கம் ஏற்பட்டு விட்டது. கையில் கொண்டு வந்திருந்த புத்தகத்தைப் பிரித்து அதில் ஆழ்ந்து போகையில் எல்லாச் சப்தங்களும், ஹோண்டா பைக் உள்பட, பிரக்ஞையிலிருந்து விலகிக் கொண்டன.

''தங்கச்சி, இறங்கல்லியா?'' என்ற கண்டக்டரின் குரல் கேட்டு அவள் விருட்டென்று எழுந்தாள். இறங்குவதற்கு முன்

வாஸந்தி

கண்டக்டரைப் பார்த்து 'தாங்க்யூ' என்றாள்.

**ப**ள்ளியை அடைந்த போது பிரார்த்தனைக் கூட்டம் கூட முடிந்து விட்டது. தலைமை ஆசிரியையின் அறையிலிருந்து வெளிப்பட்ட அவளது வகுப்பு ஆசிரியை மைதிலி ஜெயராமன்,

''ஏன் மீரா இவ்வளவு லேட்?'' என்றாள்.

''ஸாரி மேம். பஸ் இன்னிக்கு லேட்.''

''போயிட்டுப் போவுது. அட்டென்டென்ஸ் ரெஜிஸ்டர் கொண்டு வா, சீக்கிரம்.''

''ஓகே மேம்'' என்று மீரா விரைந்தாள். தலைமை ஆசிரியையின் அறைக்கு அடுத்த அறையிலிருந்து ரெஜிஸ்டரை எடுக்கும் போது லேசாகத் திறந்திருந்த கதவின் இடைவெளி வழியே உள்ளே மீனாட்சி நிற்பது தெரிந்தது. என்ன விசாரணை நடக்கிறதோ என்று கவலையுடன் மீரா வகுப்புக்கு விரைந்தாள்.

அட்டெண்டென்ஸ் எடுத்து முடிக்கும் சமயத்தில் மீனாட்சி வந்து சேர்ந்தாள். மைதிலி கடுப்புடன் 'போய் உட்கார்' என்றதிலிருந்து மைதிலிக்கு அவள் மேல் மிகுந்த கோபம் என்று தெரிந்தது. மீனாட்சி எதுவுமே நடக்காதது போல ஒருவித அலட்சியத்துடன் தனது இருப்பிடத்தில் அமர்ந்து கொண்டாள். அமர்வதற்கு முன் மீராவின் பக்கம் திரும்பிப் புன்னகை செய்தாள். மீரா அவசரமாக முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

பாடம் நடத்த ஆரம்பித்ததுமே மைதிலி அதில் ஒன்றிப் போனாள். ஆனால் பாடத்தை முடித்ததும் கேள்வி கேட்கும் போது வேண்டுமென்றே மீனாட்சியைக் கேள்வி கேட்டு அவளைச் சங்கடத்துக்குள்ளாக்குவது போல் தோன்றிற்று. மீனாட்சிக்கு எந்தச் சங்கடமும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. வாயை மூடிக் கொண்டு அவள் நின்றது மீராவுக்கு அவமானமாக இருந்தது.

''மீனாட்சி, நீயெல்லாம் எதுக்கு ஸ்கூலுக்கு வர்றே?'' என்றாள் மைதிலி கோபத்துடன். ''உங்க அப்பாவுடைய பணத்தை வேஸ்ட் பண்றது மட்டுமில்லே, எங்க நேரத்தையும் விரயம் பண்ணறே. இவ்வளவு நேரம் நான் பாடம் நடத்தும் போது உன் கவனம் எங்கேயிருந்தது?''

மீனாட்சி வாயே திறக்காமல் கல்லுளி மங்கத்தனத்துடன் நின்றாள். மைதிலி சோர்ந்து மற்றவர்களிடம் கவனத்தைத் திருப்பினாள். வகுப்பு முடிந்து மைதிலி கிளம்பிச் சென்றதும் மீனாட்சி சிரித்தபடியே மீராவின் அருகில் வந்து,

''ஹாய்!'' என்றாள். ''எங்கம்மா சரியான போர். என்னைத் தேடிக்கிட்டு உங்க வீட்டுக்கு வந்துட்டாங்களாமே!''

பகபகவென்று அவள் சிரிப்பதைப் பார்த்து மீராவுக்கு எரிச்சலாக வந்தது.

''லுக் மீனாட்சி. இனிமே இந்த மாதிரி வம்புலே என்னை மாட்டி வைக்காதே. எனக்குப் பொய் சொல்லிப் பழக்கமில்லே. உங்கம்மாவைப் பார்த்ததும் நா நிஜம்மாவே நர்வஸ்ஸாப் போயிட்டேன்.''

மீனாட்சி பக்கென்று சிரித்தாள்.

''ச்சீ, எங்கம்மா பாவம், அவங்க கடையை விட்டா வேற ஒண்ணும் தெரியாது. எல்லாத்தையும் நம்பிடுவாங்க. நீ பயப்பட வேண்டியதில்லே.''

''அதனாலே?'' என்றாள் மீரா எரிச்சலுடன். ''நீ என்ன வேணா பொய் சொல்லு. எனக்கும் அதுக்கும் சம்பந்தமில்லே. என்னை அதிலே மாட்டாதே. அடுத்த முறை நான் பொய் சொல்ல மாட்டேன். நிஜத்தைச் சொல்லிடுவேன்.''

மீனாட்சி அவள் முகவாயைப் பிடித்தாள். ''ஏய், கோவிச்சுக்காதே. இனிமே உன் பெயரைச் சொல்ல மாட்டேன்.''

''தாங்க்யூ'' என்றாள் மீரா விறைப்புடன். மீனாட்சி குனிந்து ரகசியக் குரலில், ''நேத்து நா எங்கே போனேன்னு உனக்குத் தெரிய வேண்டாமா?'' என்றாள்.

''வேண்டாம்'' என்றாள் மீரா விறைப்பு குறையாமல்.

''உனக்குப் பொறாமை.''

''ஓ.கே. ஆமாம், பொறாமை.''

''இன்னொரு விஷயம் கேட்டால் இன்னும் பொறாமைப்படுவே'' என்றாள் மீனாட்சி அசராமல். மீரா எழுந்திருக்க யத்தனிக்கையில் அவள் காதருகில், ''ஐ ஆம் இன் லவ்'' என்று கிசுகிசுத்தாள். என் முகத்திலே புதுசா பிரகாசம் தெரியலே?''

மீராவுக்குச் சிரிப்பு வந்தது. ''ஒண்ணும் தெரியல்லே. அசடுதான் வழியுது வழக்கம் போல.'' மீனாட்சி நிச்சயம் ரோசம் கெட்டவள். அதற்கும் சிரித்தாள். பிறகு மீண்டும் குனிந்து, ''பொறாமைப் படாதேடி இவளே'' என்றாள். ''உன் இங்கிலீஷ் பாதிப் பேருக்குப் புரியறதில்லே. அதனாலேதான் உன்னை விருந்துக்குக் கூப்பிடறதில்லே!''

கருக்கென்ற கோபத்துடன் மீரா நிமிர்ந்தாள். ''மீனாட்சி! நீ உன் இடத்துக்குப் போ. எனக்கு இதிலே இன்ட்ரெஸ்ட் இல்லே. மேம் சொன்னதை ஞாபகம் வெச்சுக்கோ.''

சட்டென்று மீனாட்சியின் முகம் மாறி

யது. ''எங்கப்பாவுடைய பணம் வீணாச் சுன்னா அவங்களுக்கு என்ன கவலை?'' என்றாள் அடிக்குரலில். ''சொந்த வாழ்க் கையிலே ஏமாற்றம் அவங்களுக்கு. யார் மேலப் பாயலாம்னு பார்க்கறாங்க.''

மீரா அதிர்ச்சியுடன் அவளைப் பார்த் தாள்.

''இப்படி நீ பேசறது ரொம்பத் தப்பு மீனாட்சி. இந்தக் கிளாசுக்கு நா மானிட் டர். எச். எம்.கிட்டே இதைப் பத்திப் புகார் பண்ணுவேன்'' என்றாள்.

''ஏய், அப்படியெல்லாம் செஞ்சு டாதே. ஒரு பேச்சுக்குச் சொன்னேன்'' என்று மீனாட்சி நழுவினாள்.

''இவளைக் கட்டி வெச்சு உதைக் கணும்'' என்று மீராவுக்கு ஆத்திரம் வந்தது. இன்று காலை இவள் ஏற்கெனவே எச்.எம். அறைக்கு அழைக்கப்பட்டிருக் கிறாள் என்று நினைவுக்கு வந்தது. இத் தனை மரியாதைக்குறைவாக எப்படிப் பேசுகிறாள் என்று ஆத்திரம் வந்தது. மைதிலி ஜெயராமன் அற்புதமான ஆசிரியை. இந்தப் பள்ளியில் சேர்ந்த புதிதில் கலாசார வித்யாசத்தினால் திண்டா டிய போது மைதிலிதான் அவளுடைய சங்கடங்களைப் புரிந்து கொண்டு அனுசர ணையாக நடந்து கொண்டாள். அவளு டைய சொந்த வாழ்வில் என்ன ஆயிற்று என்று தெரியாது. விவாகரத்தானவள்





''என்னோட கதைக்கு அந்தப் பத்திரிகை ஆபீஸில் தனி மதிப்பு.''

''அப்படியா?''

''ஆமாம். அதைப் போடறதுக் குள்ளே அங்கே தனியா ஒரு குப்பைக் கூடை வச்சிருக்காங்கன்னா பார்த்துக் கோயேன்!''

- ஆலத்தம்பாடி ராஜகோபால்

---

என்று தெரியும். அதை ஏதோ மிகப் பெரிய விஷயம் போல் அவள் வகுப்புப் பெண்கள் பேசுவது இங்கு வந்து இரண்டு வருடங்கள் ஆகியும் மீராவுக்குப் புரியவில்லை.

ஸ்போர்ட்ஸ் டீச்சர் நாகமணி விசிலைப் பலக்க ஊத, மீரா தன்னுடைய டீம் பெண்களுடன் கூடைப் பந்தாட்ட மைதானத்துக்கு விரைந்தாள்.

மறுபடி நாகமணி விசில் ஊத, ஆட்டம் தொடர்ந்தது. மீரா ஆவேசமாகப் பந்தைத் துரத்திப் பிடித்து, 'மீரா, மீரா' என்று ஆரவாரம் எழ, கையைத் தூக்கி அண்ணாந்து வீசி கூடைக்குள் விழ்த்தி யதும் 'ஹே ஹே' என்ற ஆரவாரம் எழுந் தது.

''மீரா!''

அவள் திரும்பிப் பார்த்தாள். மைதிலி ஜெயராமன் அவளை நோக்கி வந்து கொண்டிருந்தாள். ஷூவை அவசரமாக அணிந்து அவளருகில் ''எஸ் மேம்?'' என்று விரைந்த போது,

''நாளைக்கு ஒரு ரேடியோ ப்ரோக்ரா முக்காக ஒரு அழைப்பு வந்திருக்கு. மூணு பள்ளிக்கூடங்க நடுவிலே விவாதம். நீ பங்கெடுத்துக்கறியா?'' என்றாள்.

''நாளைக்கேவா? எப்படி மேம்? தயார் செய்துக்க வேணாம்? எதைப் பத்தி விவாதம்?''

''மதச்சார்பின்மையைப் பற்றி. நான் ஹெல்ப் செய்யறேன். இன்னிக்கு இங்கி ருந்து டான்ஸ் க்ளாஸ் பாட்டுக் கிளாசுன்னு எங்கேயும் போக வேண்டாமே?''

''வேண்டாம்.''

''அப்படீன்னா எங்கூட என் வீட்டுக்கு வா. எங்கிட்ட ஒரு நல்ல புத்தகம் இருக்கு. அதைப் படிக்கக் குறிச்சு வெச்சுக்கோ. நானும் சில குறிப்புகள் தர்றேன். வீட்டுக்கு ஃபோன் பண்ணிச் சொல்லிடு. நான் உன்னைக் கொண்டு விடறேன்னு.''

மீரா உற்சாகத்துடன் ''ஓ.கே. மேம். தாங்க்யூ மேம்'' என்றாள்.

பள்ளி அலுவலக அறைக்குச் சென்று வீட்டுக்கு போன் செய்து விஷயத்தைச் சொன்ன போது, அம்மா சந்தோஷத்துடன் ''குட்'' என்றாள். ''டீச்சரே கொண்டு விடட்டும். நோ தாங்க்யூன்னு தனியா இருட்டிலே கிளம்பிடாதே'' என்று சேர்த் துக் கொண்டாள். நியூயார்க்கில் பயந்த மாதிரியே மெட்ராசிலும் அம்மா ஏன் பயப் படுகிறாள் என்று புரியவில்லை. கேட் டால், 'எல்லா ஊரும் கெட்டுக் கிடக்கு'' என்கிறாள்.

மைதிலி ஜெயராமனுடன் பயணம் செய்த போது ஒரு ஆசிரியை என்கிற பந்தா வைக் காண்பிக்காமல், ஒரு தோழியைப் போல் மைதிலி பழகியது மெல்லிய வியப்பை ஏற்படுத்தியது. மைதிலி வசதி உள்ளவளாகவே தென்பட்டாள். சொந்தக் கார் வைத்திருந்தாள். ஆழ்வார்ப்பேட்டை யில் சின்னத் தோட்டம் கொண்ட தனி வீடாக இருந்தது. வாசலில் வண்டி நின்ற தும் வராந்தாவில் உட்கார்ந்திருந்த இளை ஞன் எழுந்தான். வண்டியிலிருந்து இறங் கிய மீராவை, எந்தச் சலனமுமில்லாமல் பார்த்தபடி. கறுப்புக் கண்ணாடி அணிந் திருந்ததில் அவளைப் பார்க்கிறானா என்று அவளுக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. இருந்தும், ''ஹலோ!'' என்றாள்.

''ஹலோ!'' என்று அவன் சிரித்தான்.

மைதிலி விரைந்து வந்து ''ஹரி, இவள் என் ஸ்டுடெண்ட் மீரா'' என்றாள். ''மீரா இவன் என் மகன் ஹரி.''

ஹரி மீண்டும் ''ஹலோ'' என்றான். அவன் வேறு எங்கோ பார்த்தபடி சொல் வது போல் இருந்தது மீராவுக்கு. மைதிலி வீட்டிற்குள் சென்றிருந்தாள்.

''உட்காருங்க'' என்றான் அவன் பரி வுடன். ''உள்ளேந்து சேர் கொண்டு வர் றேன்'' என்று நகர்ந்தவனிடம் ''வேண் டாம் இங்கேயே இருக்கே?'' என்றாள் மீரா மெல்லிய வியப்புடன்.

''அப்ப சரி. உக்காருங்க'' என்றான் அவன் புன்சிரிப்புடன்.

(தொடரும்)

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி டிசம்பர் 1, 1941

இன்று, ''ஸ்ரீதர்'' என்று கார்ட்டூன் உலகிலும் ''பரணீதரன்'' என்று ஆன்மீக இலக்கியத்திலும், ''மெரீனா'' என்று நாடக மேடையிலும் பிரபலமடைந்து விட்டவர், முதன் முதலாகப் பத்திரிகைக்கு வரைந்த சித்திரங்கள் இவை. ''இந்த ஹிட்லர், ஸ்டாலின் படங்கள் பிரசுரமானதைப் பார்த்ததும் நான் ஆகாயத்தில் பறந்தேன்!'' என்று நினைவுகூர்கிறார் ஸ்ரீதர்.





## கலகம் ஏற்படுத்திய கட்டெறும்பு!

''லக்னௌவில் பட்டப் பகலில் ஒரு முஸ்லிம் கான்ஸ்டேபிளைக் கட்டெறும்பு கடித்தது உண்மையா?'' என்று லாரென்ஸ் காமன்ஸ் சபையில் கேட்பார்.

அதற்குப் பின்வருமாறு பதில் கிடைக்கும் :-

1) ''சம்பவம் நடந்தது உண்மைதான்;

2) அதன் பலனாக, ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் கலகம் ஏற்பட்டு 263 பேர் மாண்டார்கள்.

3) மேற்படி சம்பவத்திலிருந்து வெளியாவது, கேவலம் கட்டெறும்புக் கடியிலிருந்து காப்பாற்றிக் கொள்ள முடியாத இந்தியர்களால் தங்கள் சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியவே முடியாது என்பதுதான்!''

மேற்படி கேள்வியையும் பதிலையும் விசேஷ லண்டன் நிருபர்கள் சிரத்தையுடன் தந்தியில் அனுப்புவார்கள். நாம் பத்திரிகையில் படித்து சந்தோஷப் பட்டுக் கொண்டிருப்போம்.

- தலையங்கத்தின் ஒரு பகுதி

## கம்பன் சார்பில்....

ஒரு தடவை கம்ப ராமாயணம் வாசித்துக் கொண்டிருந்தோம். ''ராமர் வனம் போகிறார் என்ற செய்தி அறிந்ததும் அயோத்தி வாசிகள் மூர்ச்சையடைந்து விழுந்தார்கள்'' என்று வந்தது. இதைக் கேட்ட ஸ்ரீ கே. சந்தானம், ''அவ்வளவு



பேரையும் திருப்பி யார் எழுப்பினார்களோ?'' என்றார். ''இதெல்லாம் கவிகளின் மிகைப் படுத்தல்'' என்பது அவருடைய அபிப்பிராயம். இதை இன்னும் சிலர் ஆமோதித்தார்கள். கம்பன் சார்பில் நான் பேசவேண்டுமென்று எண்ணி, ''நீங்கள் இப்படித்தான் பேசுவீர்கள். ராஜாஜியைச் சிறைக்குக் கொண்டு வந்த அன்று ரயில்வே பிளாட்பாரத்தில் நாலைந்து பேர் விம்மி விம்மி அழுதார்கள். இதை நேரில் பார்க்காதவர்கள் நம்ப முடியுமா?'' என்றேன். அப்போது திருவெண்காடு சுப்பிரமணியம் ''ராஜாஜி வரையில் போவானேன்? நேற்று என்.ஜி. ரங்காவை விடுதலை செய்து வாசலில் கொண்டு போனதும், அவரை உடனே போலீஸ் வண்டியில் ஏற்றினார்கள். அதைப் பார்த்தபோது என் கண்களில் ஜலம் வந்து விட்டது'' என்றார். இதைக் கேட்ட ஸ்ரீ சந்தானம், ''கண்ணிலே ஜலந்தானே வந்தது? மூர்ச்சையடைந்து விழவில்லையே?'' என்று கேட்டார். ஸ்ரீ சுப்ரமணியம் பளிச்சென்று ''ஸ்ரீ ரங்காவை எனக்கு முன் பின் தெரியாது; பார்த்துப் பேசியது கூட இல்லை; ஒரு வேளை உங்களை அப்படிக் கொண்டு போயிருந்தால் மூர்ச்சையடைந்து விழுந்திருப்பேன்!'' என்றார்.

(திருச்சி சிறையிலிருந்து விடுதலை செய்த சிலரை, சிறை வாசலிலேயே பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் மறுபடியும் கைது செய்து வேலூர் சிறைக்குக் கொண்டு போனார்கள். அவர்களில் ஸ்ரீ என். ஜி. ரங்கா எம்.எல்.ஏ. (சென்ட்ரல்) ஒருவர்)

- மூன்றுமாதம் கடுங்காவல் - ரா.கி.



## சுகன்யா - ராஜகுமாரி

'கச்ச தேவயானி' படத்தின் சிறப்புக்குக் காரணம் டி.ஆர். ராஜகுமாரியின் நடிப்பு. தேவயானி வேஷந் தரித்த ராஜகுமாரி மட்டும் அவ்வளவு திறமாக நடித்திராமற் போனால், கசனை உயிர்ப்பித்த சுக்ராச்சாரியாரால் கூடப் படத்துக்குப் பிழைப்பு மூட்டியிருக்க முடியாது என்று சொல்லப்பட்டது. அந்த நல்ல பெயரை சதி சுகன்யாவிலும் டி.ஆர். ராஜகுமாரி நிலை நாட்டிக் கொள்ளப் போகிறாராம்.



## காங்கிரஸ் கமலம்

தமிழ் நாட்டில் வடுவூர் துரைசாமி ஐயங்கார் அவர்களைப்பற்றிக் கூறினால் அது மலையாளத்தானுக்கு யானையைப் பற்றிக் கூறுவது போலாகும். நவீனங்களைப் பற்றி நினைத்தால் ஸ்ரீ ஐயங்கார் அவர்களைப்பற்றி நினைக்காமலிருக்க முடியாது. 'வடுவூர் துரைசாமி ஐயங்கார் நாவல்' என்றால் அதில் திடுக்கிடும் சம்பவம், நம்பமுடியாத காதல், பயங்கரக் கொலை, சாமர்த்தியக் களவு, பலாத்காரம், ஆண் பெண்ணாய் மாறுதல், பெண் ஆணாய் மாறுதல், காதலர் பிரிதல், பிரிந்தவர் கூடுதல் - இவ்வளவு சம்பவங்களும் நிறைந்திருக்கும். இந்த நூலிலும் அந்த அம்சங்களெல்லாம் நிரம்பியிருக்கின்றன.

- படித்துப்பார்



# அரசியல் தீபாவளி!

ஜெயலலிதா : ஹலோ முன்னாள் முதல்வரா? நான்தான் இந் நாள் முதல்வர் பேசறேன்.. கங்கா ஸ்நானம் ஆச்சா?

கருணாநிதி : கங்கா ஸ்நானம் ஆச்சு. காவேரி ஸ்நானம் போச்சு.

ஜெயலலிதா : பொறுங்கள். கிருஷ்ணா ஸ்நானம் கூடப் பண்ணலாம். ஆமாம், 'தீபாவளி ஸ்பெஷல் பாமாயில்' பட்சணமெல்லாம் எப்படி?

கருணாநிதி : பாமாயிலுக்காகக் கொடுத்த பணம் பஸ் சார்ஜுக்கே பத்தலைன்னு பையன் திரும்பி வந்துட்டானே! ஆமாம், என்னது, 'தாயே, அம்பிகே, பராசக்தி, லோக மாதா'ன்னு ஏதேதோ சப்தம் கேட்குது போனில்?

ஜெயலலிதா : அதொன்றுமில்லை. என் பக்தர்கள், சாரி, எம்.எல்.ஏ.க்கள் என்னைத் தரிசிக்க, சாரி, என்னைப் பார்க்க வந்திருக்காங்க.

கருணாநிதி : அப்படியா? சரி, போய் வரம் கொடுங்கள், சாரி, வாழ்த்துக் கூறுங்கள்.

– க. செல்வகுமார், சென்னை - 20

அத்வானி : ஹலோ! இது ராவ் விடுதானே. நான் அத்வானி பேசறேன். அவருக்குத் தீபாவளி வாழ்த்துச் சொல்லணும் கொஞ்சம் கூப்பிடுங்க.

ராவ் உதவியாளர் : அத்வானி சார்! அவரு அல்வா துண்டை வாயில போட்டிருக்கார். அது உள்ளேயும் போகாம வெளியேயும் வராம வாயை அடைச்சிடுச்சி! ரொம்ப சிரமப்பட்டுட்டிருக்காரு... கொஞ்ச நேரம் கழிச்சி போன் பண்ணுங்களேன்.

அத்வானி : ரொம்ப சந்தோஷம். சிரிப்பு வராத முகத்துக்குப் பேச்சும் வராம ஆயிடுச்சா... வாழ்த்து அவருக்கு இல்லே. அல்வா செய்தவங்களுக்குன்னு சொல்லு. ஜெய் ராம்....

– பா. நம்பிராஜன், காமனேரி.

நிருபர் அமைச்சருக்கு ஃபோன் செய்கிறார்.

நிருபர் : தீபாவளி வாழ்த்துக்கள்! கங்கா ஸ்நானம் பண்ணிட்டீங்களா?

அமைச்சர் : புரட்சித் தலைவி ஆசியோட கங்கா ஸ்நானம் பண்ணிட்டேன்.

நிருபர் : புத்தாடை உடுத்தியாச்சா?



பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள பொன் நகைப் பரிசைப் பெறுபவர் :

க. செல்வகுமார்,
41, 28வது குறுக்குத் தெரு,
இந்திரா நகர்,
அடையாறு,
சென்னை - 600 020.

அமைச்சர் : 'புரட்சித் தலைவி ஆசியோட புத்தாடை உடுத்தியாச்சு.'

நிருபர் : 'பட்டாசு வெடிச்சீங்களா?'

அமைச்சர் : 'புரட்சித் தலைவி ஆசியோட வெடிச்சாச்சு.'

நிருபர் : 'சாப்பிட்டீங்களா?'

அமைச்சர் : 'புரட்சித் தலைவி ஆசியோட சாப்பிட்டாச்சு.'

நிருபர் : 'இந்த வருஷ தீபாவளிக்கு விலையெல்லாம் ரொ ம் ப ஏறிப் போச்சே?'

அமைச்சர் : 'புரட்சித் தலைவி ஆ...'

நாக்கைக் கடித்துக் கொண்டு அவசரமாக ரிசீவரை வைக்கிறார்.

- வெ. முருகானந்தம், தஞ்சாவூர்.

கருணாநிதி : ஹலோ! வி. பி. சிங்கா? நாம வைச்சிருந்த மண்டல் மத்தாப்பை நரசிம்மராவ் எடுத்துட்டுப் போயிட்டாரேன்னு கவலைப்படாதீங்க. இப்ப புதுசா ஆரிய எதிர்ப்பு வெடிகள் தயாரிச்சிட்டிருக்கேன். ஆறு டஜன் அனுப்பவா?

வி. பி. சிங் : போதும்பா! நீ கொடுத்த மண்டல் மத்தாப்புல கட்டுக் கிட்டதே ஆயுசுக்குப் போதும். புது வெடியெல்லாம் நீயே வைச்சுக்க! எனக்கு வெடி வைக்காதே!

- முக. தி. க. பாலசுப்பிரமணியன், முசிறி.



# கல்கி



பாலு ஜுவல்லர்ஸ்




## கல்கி தீபாவளி மலர் '91 - வாசகர் கருத்து

◆ கல்கி தீபாவளி மலர் கண்டேன். தெய்வ மணமும் இலக்கிய மணமும் ஒருங்கே கமழ்வது தனிச் சிறப்பு. காஞ்சி முனிவர்களின் படங்கள் அற்புதம். 'மஹா பெரியவாள் விருந்து' அந்த மஹானின் அபார மஹிமையை நன்கு விளக்குகிறது.

அட்டைப்பட விளக்கமும், 'ஜோக்' நீர் வீழ்ச்சி கட்டுரையும் அவ்விடங்களை உடனே சென்று பார்க்கத் தூண்டுகின்றன. சராசரி மத்திய வர்க்க மனிதன் ஆசையை இப்படித் தூண்டி விடலாமா ?

திருமங்கலம், கே. வரதராஜன்.

◆ கல்கி தீபாவளி மலர் பலதரப்பிலும் பாராட்டுக்குரியது. மணிமணியான படைப்புகள். அழகிய அச்சமைப்பு, பயனுள்ள கட்டுரைகள், பாராட்டத்தக்க கவிதைகள். கோகுலம் பகுதிக்கும் பாராட்டுக்கள்.

சென்னை - 78, நெல்லை ஆ. கணபதி.

◆ தீபாவளி வழக்கம் போல் உங்கள் தீபாவளி மலருடன் ஆரம்பமாகியது. ஒரு மாதம் முன்பே நான் 'மலரை' ரிசர்வ் செய்து வைத்திருந்தேன். மிக அற்புதமான படைப்பு. ஒரு பழனி பஞ்சாமிர்தம் இது. தஞ்சாவூர் கதம்பம் இது.

சென்னை - 4, கி. வேங்கடசுப்ரமண்யன்.

◆ அமரர் கல்கியின் அற்புத சிறுகதைகளை ஆண்டுக்கு ஒருமுறையாகிலும் ப டி க் கு ம் வாய்ப்புதனைத் தருவது 'கல்கி' தீபாவளி மலர். அந்த வகையில் இவ்வாண்டு மலரில் ஸாவித்ரி எம். ஏ. கதை படித்து மகிழ்வு மிகக் கொண்டேன்.

ஊத்தங்கரை, கவி. செங்குட்டுவன்.

◆ சிக்கல் சிங்கார வேலனின் படத்துக்கும், அது சம்பந்தமான கட்டுரைக்குமே ரூ 30 சரியாகப் போய் விட்டது எனலாம். மீதிப் பக்கங்களில் உள்ள அத்தனை விஷயங்களும், கலையழகு மிளிரும் வண்ணப்படங்களும், தெவிட்டாத சுவையுள்ள கதைகளும், கருத்துச் செறிந்த கட்டுரைகளும் ''கல்கி'' அளித்த அன்பளிப்பு! தீபாவளி போனஸ்!

புதுவை, கல்வே. எஸ். சதாசிவம்.



வெள்ளையராக இருக்கிறார்களே! அது தான் நெருடல். நிறபேதம் கூடாது என்பதற்காகத்தானே பகிஷ்கரித்தோம்! 'அந்த பேதம் இனி இல்லை' என்று சொல்லிக் கொண்டுதானே வருகிறார்கள். அதை நிரூபிப்பதற்காகவாவது ஓரிரு கறுப்பரை டீமில் சேர்த்திருக்கலாம் இல்லையா!

● வாசுதேவன், கல்கத்தா.

? ஆண்டு முடியப் போகும் இந்தச் சந்தர்ப்பத்தில் உங்கள் மனத்தை நெகிழ

# 'பாரததேசம்' தொடங்கப்போவதாக என்.டி.ஆர். அறிவித்துள்ளாரே?

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

? 'தினத்தந்தி' பொன் விழா ஆண்டைக் கொண்டாடுவது பற்றி?

! தமிழ் படிப்பது கேவலம் என்று கருதப்பட்ட காலத்தில் தமிழ் படிப்பதைக் கௌரவம் என்று கருதுமாறு ஓர் உரைநடை மறுமலர்ச்சியை உருவாக்கியவர் அமரர் கல்கி. ஆதித்தனாரோ படிக்க வேண்டும் என்ற ஆர்வமே இல்லாத பாமரரைக் கூடப் படிக்குமாறு செய்தவர். இருவரும் சென்னை காந்திநகரில் அருகருகே வசித்தவர்கள். நல்ல நண்பர்களாக விளங்கியவர்கள். கல்கி, தம் வாசகர்களைச் சமுதாய - அரசியல் விஷயங்களில் தம் நிலைக்கு உயர்த்தி உதவினார். ஆதித்தனார், பாமர வாசகர் நிலைக்குக் கீழிறங்கி வந்து அவர்களுக்கு அரசியல் சமுதாய அறிவு புகட்டி உதவினார். இரு பத்திரிகைகளுமே ஒரே சமயத்தில் பொன் விழா காண்பது அவர்களுக்கு அஞ்சலி செலுத்த ஒரு சந்தர்ப்பம்.

● அ. முஸ்தபா, தக்கோலம்.

? கமலஹாசனின் தந்தை டி. சீனிவாசன் மறைவு உங்களிடம் என்ன எண்ணத்தைத் தோற்றுவித்தது?

! அவர் கமலின் தந்தை என்பதில் அவருக்குப் பெருமைதான்; ஆனால் அதே நேரத்தில் அவர் அந்த நாளைய தூய காங்கிரஸ்காரர், தேசபக்தத் தியாகி என்பது மறக்கக் கூடாத தனிச் சிறப்பு.

● அ. சாகுல் அமீது, திருச்சி.

? எத்தனையோ ஆண்டுகளாகப் பகிஷ்கரிக்கப்பட்டு வந்த தென்னாப்பிரிக்க கிரிக்கெட் அணியினர் இந்தியா வந்திருக்கிறார்களே...?

! மகிழ்ச்சிதான். ஆனால் எல்லாருமே



☛ மாறுவாரா?



☛ 'ஆஹா... ஓஹோ!'

வைத்த இரு நிகழ்ச்சிகள்?

! அன்னை தெரஸாவைச் சந்திக்கச் சென்ற தென்னாப்பிரிக்கக் கிரிக்கெட் அணியினர், 'we felt humbled' என்று கூறியது - ஒன்று. ஆசி பெற்று ஓட்டலுக்குத் திரும்பிய சற்று நேரத்துக்கெல்லாம் அவர்கள் ஒன்று சேர்ந்து ஒரு லட்ச ரூபாய்க்குக் காசோலை அன்னை தெரஸாவுக்கு அனுப்பி வைத்தது - இரண்டு.

● ப. இராம் முருகன், சிவகங்கை.

? உலக செஸ் சாம்பியன் காரி காஸ்பரோவைத் தோற்கடித்த ஆனந்த், பலே ஆள்தான் இல்லையா?

! இந்த ஆனந்த் விவகாரம் ஒன்றும் புரியவேயில்லை. காலையில் காஸ்பரோவை ஜெயிக்கிறார். மாலையில் கார்போவிடம் தோற்கிறார். தொடர்ந்து ஆனந்த் ஜெயித்துக் கொண்டே இருப்பது எப்பவோ?

● பூங்குழலி, கெங்கவல்லி.

? 'இன்னும் நூறாண்டுக்குத் தமிழ் மொழி இருக்குமா என்பதே சந்தேகம்' என்கிறாரே சுஜாதா?

! இத்தனை ஆயிரம் ஆண்டுகளாக இருந்து வரும் தமிழ் அப்படி ஒன்றும் சுஜாதா பயப்படுவது போல் மறைந்து போய் விடாது. ஆனால் ஒன்று; தமிழ்,

பழம்பெருமை மட்டுமே பேசும் வளர்ச்சி குன்றிய மொழியாகி விடக் கூடிய ஆபத்து உள்ளது. அவ்வாறின்றி, உயிர்த்துடிப் புள்ளதாக விளங்கி விசுவரூபமெடுக்க நாம் மொழி பெயர்ப்பை நிறுத்தி ஒலி பெயர்ப்பை ஏற்க முன்வர வேண்டும்.

● ஆர். மூர்த்தி, கல்லிடைக்குறிச்சி.

**? வி. பி. சிங்கை 'வேஷதாரி' என்று பா. ஜ. க. தலைவர் முரளி மனோகர் ஜோஷி வர்ணித்துள்ளாரே?**

! அந்த வர்ணனை அத்வானி, ஜோஷி உள்பட அரசியல் தலைவர்கள் எல்லாருக் குமே பொருந்தக் கூடியதுதான்.

● ஜி. இந்திரா, திருச்சி.

**? திருச்சி, ஆளும் கட்சி எம். எல். ஏ. உறவினர் மீது அரசு குற்ற நடவடிக்கை எடுத்தது எதைக் காட்டுகிறது?**

! ஆளும் கட்சி எம். எல். ஏவுடைய தகப்ப னார் என்றாலும் 'குற்றம் குற்றமே' என்று செயல்பட்ட அளவில் காவல் துறைக்கு மட்டுமின்றி முதல்வருக்கும் பாராட்டு. ஆனால் ஒன்று; இன்று இப்படிப் பிடிப்பது போல் பிடித்து, நாளை அப்படி விட்டு விட்டால் பாராட்டு வாபஸ்!

● மல்லிகை மன்னன், மதுரை. ❑

**? இளையராஜாவை 'ஆஹா ஓஹோ' என்று பாராட்டுவதைப் பார்க்கும் போது, 'அந்தச் சங்கீத மும்மூர்த்திகள் கூட இவரிடம் வந்து சங்கீதம் கற்றுக் கொள்ள வேண்டும்' என்று சொல்லி விடுவார்கள் போலிருக்கே?**

! வடக்கே சிராவண் - நதீம் ; ராம் - லக்ஷ் மண்; மிலிந்த் - ஆனந்த்; ஜதின் - லலித்; நிகில் வினய் என்று இளைய இசை அமைப்பாளர்கள் வெளுத்துக் கட்டுவது போல் இங்கும் நடந்தால் இப்படிப்பட்ட அளவுக்கு மீறிய அபத்தமான புகழுரை களுக்கு இங்கு இடமிருக்காது. ஆனால் அப்படி யாரும் வரக் காணோமே! அரசிய லாகட்டும், சினிமாவாகட்டும் இங்கே தாஜா பண்ணியே (முள் குத்தாமல்) ரோஜா பறிக்க நினைப்பவர் பலர் உண்டு.

● கே. ஆர். விஜயா, கோவை.

**? சூப்பர் ஸ்டார் சந்நியாசியாக மாறுவார் என்று நம்புகிறீர்களா?**

! ஒரு காலத்தில் அப்படிப்பட்ட நம்பிக் கைக்கு அவர் இடமளித்ததுண்டு. ஆனால் இப்போது ஒரு கல்வியாளராக அவர் உரு வாகவே வாய்ப்பு அதிகம்.

● அ. ஜமால் மொய்தீன், செங்குன்றம்.

**? தேசிய முன்னணியின் செயல்பாட்டால் வெறுப்புற்று 'பாரத தேசம்' எனும் புதிய கட்சி தொடங்கப் போவதாக என். டி. ஆர். கூறியுள்ளாரே!**

! 'சீச்சீ இந்தப் பழம் புளிக்கும்' கதை தான்!

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

**? 'எவ்வளவு எதிர்ப்பு வந்தாலும் ராமர் கோவிலைக் கட்டி முடிப்போம்' என்று பார திய ஜனதா அறிவித்திருக்கிறதே?**

! கட்டி முடிப்பதில் பிரச்னை ஒன்று மில்லை. இடித்துத் தள்ளுவதில்தான் பிரச்னை. இந்தப் பிரச்னை, நாடு தழுவிய அளவில் மனக்கசப்பை, சகோதரராய் வாழ வேண்டியவர் இடையே உருவாக்குவது மட்டுமல்ல; உலகளாவிய முறையில், முஸ்லிம் நாடுகளில் வாழும் கணக்கற்ற இந்துக்களுக்குப் புதிய தலைவலிகளை உருவாக்கும்.

● கே. ரமேஷ்பாபு, சேலம்.

**? கருணாநிதி ஒரு நாளிதழில் கூறியுள்ளது போல், நாடு, காட்டு மிராண்டி காலத் துக்குத்தான் திரும்பிக் கொண்டிருக்கிறதா?**

! காஷ்மீரிலும் பஞ்சாபிலும் நிலவிய வன்முறை இப்போது உத்தரப்பிரதேசத்துக் கும் இதர வட மாநிலங்களுக்கும் பரவி வருவதைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றுகிறது. பம்பாயில் கூட ஒரு ரயி லில் வெடிகுண்டு வைக்கப்பட்டு, அது வெடித்ததில் ஏற்பட்ட துயரம் இதனை மேலும் உறுதிப்படுத்துகிறது.


☛ நாடு போகும் போக்கு...


☛ வேஷதாரி?


☛ பலே ஆள்தான்!


☛ அஞ்சலிக்குச் சந்தர்ப்பம்

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
மல்லிகை மன்னன்,
258-A, ஆத்திகுளம்,
மதுரை - 625 007.







# குணா

மனவெளி மனிதனின் காதல்கதை. ஹைதராபாத்தின் உடல் விற்கும் பெண்கள் காலனியின் பாத்திரங்களை நிலைக்களன் களாகக் கொண்டு துவங்குகிறது.

டாக்டரிடம் இளைஞன் விம்முகிறான் :

''எங்கப்பா சின்ன வயசிலயே அம்மாவை விட்டுட்டு ஓடிட்டார். அத னாலதான் அம்மா இந்த பொழைப்புக்கு வந்தாங்க. என்னால தடுக்க முடியலை. காப்பாத்த சொத்து எதுவும் இல்லை. இருக்கிற ஒரே சொத்து இந்த மூஞ்சிதான். அப்பா கொடுத்த மூஞ்சி. அவலட்சண சொத்து. டாக்டர்! எனக்கு இந்த மூஞ்சி யைப் பிடிக்கலை. இதை ரப்பர் போட்டு அழிக்க முடியுமா டாக்டர்?''

ஆதங்கத்தில் நம் மனசும் சேர்ந்து கரை கிறது.

எத்தனை அழகாய் வேலுவின் காமிரா ஒரே மூச்சில் அந்தப் பகுதியை, கஸ்ட மர்கள், ஹிந்துஸ்தானி, ஷர்மிலியின் நடனம், எனச் சுட்டிக் காட்டுகிறது! ரோஜாத் தோட்டத்தைக் கடந்து போகும் காற்று போல இளையராஜாவின் எத்தனை வாசனையான பின்னணி இசை! மண்டி படத்து நஸ்ருத்தீன்ஷா பாத்திர கமலின் நடிப்பு; வெல்வெட் கைக்குட்டையில் வைரம் போன்ற ரோஷ்ணி; எஸ்.பி.பி; ரேகாவின் இயல்பான அணைப்பு.

பிரமிப்பு, எதிர்பார்ப்பு எல்லாம் கொஞ்ச நேரத்திற்குத்தான்.

பிறகு?

மூளைக்குள் பிறாண்டல் உணர்வுதான் ஏற்படுகிறது.

கதாநாயகன் நல்லவனா கெட்டவனா? அழகிய தமிழ் பேசுகிற அப்பாவியா? முட்டாளா? புத்திசாலியா? இரண்டும் கலந்த பிரகிருதியா? குழப்பம்! தியேட்ட ரில் தனியாய் அமர்ந்து காட்சிகளைத் திரும்பத் திரும்பப் போடச் சொல்லிப் பார்த்தால் கொஞ்சம் புரியலாம்: கடந்த வாழ்க்கையின் காயங்களால் மனத்துள் நிரம்பித் ததும்பும் சமுத்திர, தனிப்படகு சவாரிக்குத் துணை தேடுகிறவன். அழகும், தெய்வீகமும், பூமியின் அழுக்குக் கரங் களும் படாத யுவதியை, 'அபிராமி'யைத் தேடுகிறவன்.

கிடைக்கிறாள். நம்புகிறான். மனத்தில் ஏற்கிறான். அவளைப் பெற, சம்மதிக்க வைக்க விநோத கடத்தல், தேவையற்ற சித்திரவதை, வன்முறை... அவள் இவனைக் கா த லி க் க த் துவங்குகை யில் படம் கிட்டத்தட்ட முடிவடையும் நிலைக்கு வந்து விடுகிறது.

கமர்ஷியலான மையக்கரு கொண்ட நாலுவரி கதைக் குழந்தை. புதிதாய்ச் செய் யும் முனைப்புடன், அதன் கண்களை பிரம் மாண்டமாக்கி, உடம்பைக் குறுக்கி, கட்டு விரலை மூன்றுமடங்கு நீட்டி.... இதற்காக ஒரு கோஷ்டியே வரிந்துகட்டி இருக்கிறது. காரணம், ஒருவேளை தேசிய விருதுக்கு முயற்சி செய்ததாக இருக்குமோ? அப்படி யென்றால் -

ஆல் த பெஸ்ட்!

– சுந்தர்ஜி

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 150/- விமானத் தபால்: ரூ. 350/-.




என் தந்தையின் நண்பரது அலுவலகத்தில் ரிஸப்ஷனிஸ்ட் வேலை காலியாக இருப்பதை அறிந்து. அவ்வேலைக்கு விண்ணப்பித்தேன். நேர்முகத் தேர்வுக்கான அழைப்பும் வந்தது.

"இது மிகவும் பொறுப்பான வேலை. மேலும் உனக்கு ஆங்கிலத்தில் சரளமாகப் பேசத் தெரிந்திருக்க வேண்டுமே... வேறு ஏதாவது வேலை இருந்தால் சொல்லியனுப்புகிறேன்" என்று கூறி திருப்பி அனுப்பிவிட்டார்.

ஆங்கிலத்தில் சரளமாகப் பேசத் தெரியவில்லை என்ற ஒரே காரணத்திற்காக ஓர் அரிய வாய்ப்பு கை நழுவப் போகிறதே என்று எனக்கு மிகவும் வேதனையாக இருந்தது.

ஒருநாள் வாரப் பத்திரிகை ஒன்றைப் புரட்டும் போது அதில் "யெஸ் ரூபா ஜெகன் ஸ்பீக்கிங்" என்ற தலைப்பில் திருமதி. ரூபா ஜெகன் அவர்கள் விவேகானந்தா கல்வி நிலையத்தில் தபால் மூலம் ஆங்கிலம் சரளமாகப் பேசப் பயிற்சி பெற்ற செய்தி வெளியாகியிருந்தது.

இப்பயிற்சியில் சேர்ந்தால் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முடியும் என்ற நம்பிக்கை எனக்கு துளிர் விட்டது.

என் தந்தையின் அனுமதி பெற்று நானும் இப்பயிற்சியில் சேர்ந்தேன்.

ஓர் ஆசிரியர் எதிரில் இருந்து பாடங்களைச் சொல்லிக் கொடுப்பதைப் போல, பயிற்சி மிகவும் எளிய முறையில் அமைந்திருந்ததால் மிகுந்த ஆர்வத்துடன் இப்பயிற்சியினை மேற்கொண்டேன்.

இப்பயிற்சியை முடித்த என்னால் இப்பொழுது ஆங்கிலத்தில் பயமின்றி சரளமாகப் பேச முடிகிறது.

ஆங்கிலத்தில் பேசத் தெரியாத காரணத்தினால் எந்த வேலை எனக்குத் தர மறுக்கப்பட்டதோ, அதே ரிஸப்ஷனிஸ்ட் வேலை எனக்கு வேறு ஒரு பிரபல நிறுவனத்தில் கிடைத்துள்ளது.

**"THE INSTITUTE'S COACHING IS SIMPLY SUPERB:"**

நீங்களும் தபால் மூலம் இப்பயிற்சியினை மேற்கொள்ளலாம். நேர்முகப் பயிற்சியும் உண்டு. நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

---

விவேகானந்தா கல்வி நிலையம்
9, நடேசன் தெரு, தி. நகர்,
சென்னை-600 017.

---

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

இதயத்திற்கு இதமானது

திருமதி ஷீலா பால், BSc., D.N.D.,
உணவியல் வல்லுநர் கூறுகிறார்.

"நல்லெண்ணெய் இரத்தத்தில் கொலஸ்ட்ரால் அளவைக் குறைக்கின்றது ஆகவே தான் நமது முன்னோர்கள் அதை "நல்ல எண்ணெய்" (தமிழ்) "மஞ்ச்சி நூனு" (தெலுங்கு) என்று அழைத்தனர். இது உடல் ஆரோக்கியத்திற்கு பாதுகாப்பானது என்பதால் தான் தென்னிந்தியர்கள் சமையல் எண்ணெய்யாகப் பயன்படுத்துகின்றனர்."

Sheila Paul



Mrs. Sheila Paul B.Sc.,
Diploma in Nutrition & Dietetics
Senior Dietition
Madras



இதயம் நல்லெண்ணெய் தயாரிப்பில் தரத்தில் சிறந்த எள் மட்டுமே உபயோகிக்கப்படுகின்றது. பிஞ்சு எள் மற்றும் பொக்கு முழுவதுமாக நீக்கப்படுகின்றது. ஆகவே இதயம் நல்லெண்ணெய் பொங்குவதில்லை. பூரி, வடை, பஜ்ஜி எது வேண்டுமானாலும் தயார் செய்யலாம்.




இதயம் சுகமாக்கும் எதையும் சுவையாக்கும்

**இதயம்**
**நல்லெண்ணெ**